# THE GYPSY GIRL

AND

# VAIKUNTA VAITHIYAR

## TWO TAMIL DRAMAS

BY

RAO BAHADUR. P. SAMBANDAM, B.A., B.L.,

*Author of:*

The Two Sisters, Galava, The Eye of Love, The Curse of Urvasi, The Merchant of Vanipura, Fate and Love, Simhalanatha, Pushpavalli. Amaladitya, Magapathi, The Ideal Wife, Siruthondar, The Golden Fetters, True Love, The Bandit Chief, Bricks-Between, At Any Cost, The Fair Ghost, The Wedding of Valli, Brahmin *vs* Non-Brahmin, Vijayarangam, As you like it, Ratnavali, Lord Buddha, The Tragedy of Silence, The Good Fairy, Geetha manjari, The True Brother, Malävikagnimitra, Chandrahari, The Demon Land, Sabapathy Part I, The Pongal Feast or Sabapathy Part II, A Rehearsal or Sabapathy Part III, Sabapathy Part IV, Blessed in a Wife, The Dancing Girl, Subadra-Arjuna, Karna the Giver, Sahadeva's Stratagem, The Surgeon General's prescription, Vichu's Wife, Sakuntala, Vikramorvasi, The Point of View, The Two Selves, The Tragic Denouement, The Sub-Assistant Magistrate of Sultanpet, Harischandra, Blind Ambition, Markandeya, Sarangadhara, Manohara, The Two Friends, The Knavery of Kalappa. As We Sow-So We Reap, Over Forty Years Before the Footlights Parts I & II, The search, Prince Koneri, The crowd in the Shandy, The Tamil Drama etc., in Tamil; and Harischandra, and Yayathi in English.

FIRST EDITION

Madras:

PRINTED BY THE PEERLESS PRESS,

13, THAMBU CHETTY STREET, G. T

2.00

 1934 Price per Copy

# குறமகள்

# வைகுண்ட வைத்தியர்

இரண்டு தமிழ் நாடகங்கள்

ராவ்பஹதூர்

**ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.,**

அவர்களால் இயற்றப்பட்டன.

இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்றத் தமிழ் நூல்கள்:—

லீலாவதி-சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள். நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், ரத்னவளி, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல்பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், சபாபதி நான்காம் பாகம், வள்ளிமணம், பேயல்லபெண் மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத் மாக்கள், சர்ஜன்ஜெனரல் விதித்த மருந்து. மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அசிஸ்டென்ட் மாஜிஸ் டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், விக்ரமோர்வசி, முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும், நாடகமேடை நினைவுகள் முதற்பாகம், நாடகமேடை நினைவுகள் இரண்டாம் பாகம், நாடகத் தமிழ், யயாதி பிராம்மணனும்-சூத்திரனும், வாணீபுர வணிகன், இரண்டு நண்பர்க சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்கண்டேயர், கண்டு பிடித்த கோனேரி அரசகுமாரன், சந்தையிற் கூட்டம், முதலியன.

முதற் பதிப்பு

சென்னை 'பியர்லெஸ்' அச்சுக்கூட

அச்சிடப்பட்டது.

 1934 [விலை

INSCRIBED

to

THE BELOVED MEMORY

of

MY PARENTS

**P. VIJIARANGA MUDALIAR**

and

**P. MANICKAVELU AMMAL**

and

MY FRIEND

**C. RANGAVADIVELU**

# PREFACE.

The Gypsy Girl was printed by me as a serial in the Swadesamitran weekly, some time back. Ever since, there has been a demand for it in book-form hence my publishing it now.

I have added to this, a small Farce written by me entitled "Vaikunta Vaithiyar" published by me a few months back in a local Comic Magazine.

I have to re-iterate that all Societies, professional and Amateur, that desire to stage the above or any other drama by me must pay me the royalty due, and take my permission before doing so. Otherwise they render themselves liable to be prosecuted before a Crimnal Court under the existing Copyright Act.

"PAMMAL LODGE"
G. T. MADRAS.
18th Oct. 1934

P. SAMBANDAM.

# குறமகள்



## நாடக பாத்திரங்கள்.

திருவேங்கடம் ஐ. சி. எஸ். ... ... ஒரு கலெக்டர்

சுந்தரேச முதலியார் ... ... ஒரு டெபுடி கலெக்டர்

அரியநாயகம் பிள்ளை ... ... ஒரு இன்ஸ்பெக்டர் ஆப் போலீஸ்

சவுந்தரராஜ ஐயர் ... ... ஒரு சப் மேஜிஸ்டிரேட்

வீராசாமி ... ... சுந்தரேச முதலியார் வேலையாள்

ரங்கநாயகி ... ... "குறமகள்"

சிரஸ்தத்தார், ஆர்டர்லிகள், கான்ஸ்டபில்கள், முதலியோர்.



கதை நிகழ் இடம்:—ஆனை மலையருகில் கலெக்டருடைய காம்ப்

காலம்—சுமார் 1936.

# குறமகள்

## முதல் அங்கம்

### முதற் காட்சி.

இடம்—யானைமலைக்கருகில் கலெக்டர் கூடாரம்.

காலம்—இரவு.

கலெக்டர் திருவேங்கடம் ஐ. சி. எஸ். மேஜையருகில் ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறார். அவர் எதிரில் சுந்தரேச முதலியார் நின்றுகொண்டிருக்கிறார்.

தி. வாஸ்தவமாகவா? ஒரே விசையில் அவ்வளவு தொகையும் கட்டிவிட்டார்களா இக்குறவர்கள்?

சு. ஆமாம், நான் சிபார்சு செய்ததின்பேரில் நீங்கள் தயவு செய்து தள்ளிக்கொடுத்த தொகை போக, மிகுதியைக் கட்டிவிட்டார்கள்.

தி. எப்படிக் கட்டினார்கள் இதற்குள்ளாக அவ்வளவு தொகையும்? இந்தக் குறவர் முதலிய ஜாதியார்களுக்கெல்லாம் நாம் எவ்வளவு பட்சம் பாராட்டினாலும் பிரயோஜனமில்லை; அவர்கள் ஜாதித் தொழிலை அவர்கள் விடவே மாட்டார்கள். நான் சொல்வது உமக்குச் சம்மதமில்லைபோலும்?

சு. இல்லை என்று கூறுவதற்காக என்னை மன்னிக்க வேண்டும். நாம் அவ்வளவு தள்ளிக் கொடுத்தும் மிகுந்த தொகையைச் சேகரிப்பதற்கு அவர்கள் எங்கேயாவது களவாடியிருக்க வேண்டுமென்று நீங்கள் நம்புவதனால், எல்லாத் தொகையும்

கொடுக்கும்படி நாம் நிர்ப்பந்தித்திருப்போமாயின், இன்னும் அதிகமாகக் களவும் கொள்ளையும் புரிந்திருப்பார்களல்லவா ?

தி. உம்,—சுந்தரேசன், இவ்வாறு நாம் கொஞ்சம் பட்சம் பாராட்டுவதினுல் அவர்கள் குணமே மாறுமென்று நீ உண்மையில் நினைக்கிருயா ?

சு. மாறலாமெனத் தோன்றுகிறது; திடீரென்று முடியாது உண்மையே. ஆயினும் காலக்கிரமத்தில் மாறுமென நினைக்கிறேன்.

தி. சரி, உன் இஷ்டப்படியே பிரயத்னப் பட்டுப்பார்! ஒரு வருஷம் உன் இஷ்டப்படிச் செய்ய உத்தரவு கொடுக்கிறேன். ஆயினும் இப்பொழுதே என் அபிப்பிராயத்தை உனக்குத் தெரிவிக்கிறேன். இந்த வருஷக் கடைசியில் இந்த ஜில்லாவில் நடக்கிற களவு கொள்ளை முதலியன ஒன்றும் குறையப்போகிறதில்லை; தவருகப் பச்சாதாபப் பட்டு நாம் தள்ளிக் கொடுத்த பணமும் கவர்ன்மென்டாருக்கு விருதாவில் நஷ்டமாகப் போகிறது. என் மனதைச் சொல்லிவிட்டேன். இன்னும் உனக்கு இப்பிரயத்னத்தில் கையிட்டுக் கொள்ள வேண்டுமென்று விருப்ப மிருந்தால் செய். என்ன சொல்கிருய் ?

சு. இப்பிரயத்னத்தை முடிவு வரையில் பார்க்கவேண்டுமென்று விரும்புகிறேன்.

தி. சரி உன் இஷ்டம். அதிக நேரமாக உன்னை விழிக்க வைத்தேன். [எழுந்திருக்கிருர்.] ஆ! அந்தப் பணத்தை எங்கே வைத்தாய்? அந்தக் குறவர்களின் தலைவன் தன் ஜாதி வழக்கத்தின்படி சாயங்காலம் பணத்தைக் கொடுத்து இரவில் அதைக் களவாட முயன்ருலும் முயல்வான்!

சு. தங்களுக்கு அந்தப் பயம் வேண்டாம். இரும்புப் பெட்டியில் அதை ஜாக்கிரதையாக வைத்துப் பூட்டியிருக்கிறேன். நாளைக் காலைவரையில் இரண்டு போலீஸ்கார்ரர்கள் துப்பாக்

கிகளுடன் கூடாரத்துக்கு வெளியில் காவல் செய்யும்படி உத்திரவு செய்திருக்கிறேன். நான் காலை எழுந்ததும் அப்பணத்தை யெல்லாம் டிஸ்டிரிக்ட் கஜானாவுக்கு அனுப்பி விடுகிறேன். தக்கபாரா வைத்திருப்பதுடன் அப் பெட்டியின் பக்கம் நானும் படுத்துறங்குகிறேன் குண்டுகளடங்கிய என் கைத்துப்பாக்கியுடன்.

தி. நீ இவ்வளவு ஜாக்கிரதை யாயிருப்பது எனக்குச் சந்தோஷத்தைத் தருகிறது. அவர்களுக்குப் பட்சம் பாராட்டிய போதிலும் இக்குறவர்களை நீ நம்பாதிருப்பது நலமே! "ஒன்றாகிய தெய்வத்தை நம்பிய போதிலும் ஒட்டகத்தைப் பிடித்துக் கட்டு" என்று யாரோ சொன்னார்களல்லவா? அப்பொழுது, நான் வருவதா? ஆ! மறந்தேன். [உட்காருகிறார்] நீயும் உட்கார். [பையிலிருந்து ஒரு சிகரேட் பெட்டியை எடுத்து தான் ஒன்றை எடுத்துக் கொண்டு]
தீப் பெட்டி யிருக்கிறதா உன்னிடம்?

சு. இல்லை, இதோ கொண்டு வரச் சொல்கிறேன். அடே வீராசாமி!

வீராசாமி வருகிறான்.

வீ. ஐயா!

சு. ஐயாவுக்கு ஒரு தீக்குச்சிப் பெட்டி கொண்டுவா.

தி. அடா! வேண்டாம். இதோ என்னிடமே யிருக்கிறது. நீ போ. [வீராசாமி போகிறான்.] நீ ஒன்று எடுத்துக் கொள். [சிகரேட் பெட்டியைக் காட்டுகிறார்.]

சு. வேண்டாம்—என்னை மன்னிக்கவேண்டும்.

தி. நீ முன்பு சிகரேட் பிடித்துக் கொண்டிருந்ததாக ஞாபகமிருக்கிறதே.

சு. ஆம், ஒருவருஷமாக இதை விட்டு விட்டேன்.

தி. ஏன்?

சு. என் சிநேகிதர் ஒருவர் இந்த வழக்கத்தை என்னால் விட முடியாதென்று பந்தயம் போட்டார், அதற்காக இதை விட்டு விட்டேன்.

தி. உம்! அதுவும் நல்லதுதான். இந்தவழக்கம் கெட்டது என்று நான் அறிந்தும் அதை விட்டுவிட என்னால் முடிய வில்லை. உனக்கு இவ்வளவு மன உறுதி யிருப்பது மெச்சத் தக்கதே! உட்கார். ஏன் நிற்கிறாய்? உன்னுடன் இன்னொரு விஷயம் பேச வேண்டும்—உட்கார்.

சு. பெரிதல்ல.

தி. உட்கார்; நான் சொல்லுகிறபடி செய். இப்பொழுது உன் னுடன் நான் பேசப் போகிற விஷயம் உத்யோக விஷயமாக வல்ல. நான் உனக்கு மேலதிகாரியாகிய கலெக்டர் என் பதைச் சற்று மறந்துவிடு. உன் சினேகிதனாக உன்னுடன் பேசப் போகிறேன், உட்கார்.

சு. [உட்கார்ந்து] உங்கள் இஷ்டம்.

தி. [சிகரேட்டைப் பிடித்துக் கொண்டே] உனக்கிப்பொழுது என்ன வயதாகிறது?

சு. முப்பத்திரண்டு.

தி. இதைப்பற்றி உன்னைக் கேட்பதற்காக என்னை மன்னிக்க வேண்டும். உனக்கு விவாகமாயிருக்கிறதா?

சு. இல்லை—உம்—இருந்தது.

தி. நீ சொல்வது எனக்கு அர்த்த மாகவில்லை.

சு. எனக்கு விவாகமாகி யிருந்தது—என் மனைவி இறந்துவிட் டாள்.

தி. உம்—இவ்விஷயம்—உனக்கு ஏதோ வருத்தத்தை யுண்டு பண்ணுகிறாற் போலிருக்கிறது. இதைப் பற்றி உன்னைக் கேட்டதற்காக என்னை மன்னிப்பாய்.

சு. அப்படி யொன்று மில்லை. ஏதோ புத்தி ஹீனம். எனக்கு நீங்கள் கேட்டதில் தவறொன்று மில்லை. நீங்கள் உங்களை நான் அறிந்தது முதல் என்னை உங்களுடைய மகன் போலவே பாவித்து வந்திருக்கிறீர்கள்.

தி. அப்படியானால் இதைப்பற்றி இன்னும் இரண்டொரு கேள்விகள் கேட்க எனக்குச் சுதந்திரம் கொடு.

சு. உங்கள் இஷ்டப்படியே.

தி. உன் மனைவி, இறந்து எத்தனை வருடங்களாகின்றன?

சு. பதினொரு வருடங்களாகின்றன.

தி. அப்படியா? ஆனால் ஏன் மறுபடியும் விவாகம் செய்துகொள்ளவில்லை? உங்கள் ஜாதியில் படித்த அழகு வாய்ந்த பெண்கள் சாதாரணமாகக் கிடைப்பார்களே?—

சு [பெருமூச் செறிந்து சற்று பொறுத்து] உங்களிடம் ஒளிப்பதற்கு இஷ்டமில்லை. என் மனைவி:—எனக்கு விவாகமான ஆறு மாதத்திற்கெல்லாம் ஒரு குழந்தையைப் பெற்றாள்!—நான் விவாகம் புரியும் முன்னரே அவள் கெடுக்கப் பட்டாள் என்று அறிந்தேன். அதன் மீது நான் அவளை விலக்கி வைக்க அவள் ஒரு வாரத்திற்குள் மரித்தாள். தற்கொலை செய்து கொண்டாள்—என்று நினைக்கிறேன்.

[துக்கப் படுகிறார்.]

தி. ஐயோ பாபம்! ஒருகால் அவள் மீது ஒரு குற்றமுமில்லாதிருக்கலாம். யாராவது பாபிகள், அவளைக் கெடுத்திருக்கலாம். அவளது அறியா வயதில்! அக்குழந்தை என்னவாயிற்று?

சு. அக்குழந்தையும் சீக்கிரம் இறந்தது.

தி. நலமே! நலமே!, ஹும்! [பெருமூச் செறிந்து] சுந்தரேசன், உனக்கு இப்பொழுது என்ன வயதாகிறது என்று சொன்னாய்?

சு. முப்பத்திரண்டு.

தி. அப்படியா? உன்னைப்பார்த்தவர் யாரும் இருபத்தைந்து இருபத்தாறுக்கு மேல் ஆகிறது என்று கூறமாட்டார்கள். அதிருக்கட்டும், பிறகு ஏன் நீ மறுவிவாகஞ் செய்து கொள்ளவில்லை?

சு. [மிகுந்த கஷ்டத்துடன்] அவள் கற்பிழந்தவள் என்று கண்ட க்ஷணமுதல் ஸ்திரீகளிடத்தில் எனக்கிருந்த நம்பிக்கையெல்லாம் அடியுடன் ஒழிந்தது! ஸ்திரீகளின் முகத்தைப் பார்ப்பதென்றால் காளகூட விஷத்தைக் காண்பது போலிருக்கிறது என் மனதிற்கு. ஸ்திரீகளை யெல்லாம் ஏன் இவ்வுலகில் சிருஷ்டித்தார் என்று கடவுளை வெறுக்கிறேன்.

தி. ஓ, இப்பொழுது தெரிகிறது! சுந்தரேசன்! ஒரு ஸ்திரீ கெட்ட நடத்தை யுடையவளாயிருந்தால் உலகத்திலுள்ள மற்றவர்களை யெல்லாம் அதன் பொருட்டு வெறுப்பது நியாயமா? ஸ்திரீகளில் அநேகர் சபல புத்தியுடையவர்களாயிருக்கிறார்கள் என்று நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆயினும் அதன் பொருட்டு உலகில் உத்தம குணமுடைய ஸ்திரீகளே இல்லை யென்று தீர்மானித்து விடலாமா! எனக்குத் தெரிந்த அநேக ஆண்மக்கள் கெட்ட நடத்தை யுடையவர்களாயிருக்கிறார்கள்; அதைக் கொண்டே உன்னையும் கெட்ட நடத்தை யுடையவன் என்று தீர்மானித்து விடலாமா? எல்லா ஆண்மக்களும் அப்படிபட்டவர்களென்று தீர்மானித்து விடலாமா? என்ன சொல்கிறாய்?

சு. கூடாதுதான்.

தி. சுந்தரேசன், நான் சொல்வதைக்கேள், உலகில் ஈஸ்வரன் ஆண் பெண் என்று இருவகையாக எல்லா ஜீவ கோடிகளையும் சிருஷ்டித்தது உலக விர்த்தியின் பொருட்டு, அதற்கு மாறாக நாம் நடக்கக் கூடாது. ஆகவே உன்மனதுக்கிசைந்த பெண்ணைப் பார்த்து சீக்கிரம் நீ கலியாணம் செய்து கொள்ள வேண்டு மென்பது என் வேண்டுகோள்.

சு. உம்—மறுபடியும் நான் மணம் செய்து கொண்டால் அந்த மனைவி மாத்திரம் சரியானவளா யிருப்பாள் என்பது என்ன நிச்சயம்?

தி. சீச்சீ! அப்படி யெண்ணுதே! என்னிடம் உன் இரகசியத்தைக் கூறினாய், என் ரகசியத்தை உனக்குக் கூறுகிறேன்;

எனக்கிப்பொழுதிருக்கும் மனைவி இரண்டாம்தாரம் என்று அநேகருக்குத் தெரியாது. நான் ஏழையாயிருந்த காலத்தில் எனக்கு விவாகமாகிய மனைவி, என்னை விட்டு வெளியேகி விட்டாள். அதனால் ஸ்திரீகளையெல்லாம் நான் வெறுத்தேனா? சனி ஒழிந்தது என்று அவளை மறந்து விட்டு, மற்றொரு விவாகம் செய்து கொண்டு இத்தனை வருடங்களாக ஸ்வாமியின் அருளால் சுகமாய் வாழ்ந்து வருகிறேன். உனக்கும் அப்படியே உத்தமமான பத்தினி கிடைப்பாளாக! நான் வருகிறேன் நேரமாகிறது நீ தூங்கப்போ— இரும்பு பெட்டியின் மீதும் ஒரு கண்ணாயிரு.

சு. அப்படியே, நானும் உங்களுடன் உங்கள் விடுதி வரையில் வருவதா?

தி. வேண்டாம். ஒரு ஆர்டர்லியை ஒரு விளக்குடன் அனுப்பு போதும்.

சு. அடே! ஒன்று இரண்டு மூன்று [வெளியிலிருந்து—சார்] இப்படி வா! துரை யவர்களை, அவர் விடுதிவரையில் ஜாக்கிரதையாக அழைத்துக் கொண்டுபோய் விட்டு விட்டுவா!— ஒரு விளக்கை எடுத்துக் கொண்டு போ—கருக்கிருட்டாயிருக்கிறது. [திருவேங்கடம், ஆர்டர்லியுடன் போகிறார்.]

உம்!—கலெக்டர் கூறியபடி,—அவர்—எனக்குக் கடைசியாக மொழிந்த மொழிகள் உண்மையா யிருக்கலாமா!— உம்!—ஈசனுக்குத் தான் உண்மை தெரியும்!—தூக்கம் வருகிறது—அடே வீராசாமி!—

வீராசாமி மறுபடி வருகிறான்.

வீ. என்னையா கூப்பிட்டிங்க!

சு. வேறு யாரை கூப்பிடுகிறது? ஏண்டா?

வீ. இப்பொ தூக்கத்திலே—வெறே யாரையோ கூப்பிட்டிங்க இண்ணு பாத்தே.

சு. புத்திசாலிதான்—சீக்கிரம் படுக்கையைப் போடு.

வீ. [கண்ணை நிமிட்டிக் கொண்டே] போட்டனுங்களே.

சு. எங்கேயடா போட்டாய்? முண்டம்! இன்னும் தூக்கம் தெளிய வில்லையா?

வீ. ஆமாங்க—போடலே—நேத்து போட்டனே அத்தே நினேச்சி கினேன்!

சு. நீ ரொம்ப கெட்டிக்காரன்—போட்ரா சீக்கிரம்—
[உலாவிக் கொண்டே]
உன்னைப் போலொரு முண்டத்தைக் கட்டிக் கொண்டழ வேண்டும், நான் கலியானம் செய்து கொண்டால்!

வீ. எப்பங்க உங்களுக்குக் கண்ணுலம்?

சு. கல்யாணமு மாச்சு கருமாந்திரமுமாச்சு—நீ சீக்கிரம் படுக்கையைப் போடு— ராத்திரி தபால் ஏதாவது வந்ததா?

வீ. ஆம் வந்துதுங்கோ. [சில கடிதங்களைக் கொடுத்து விட்டுப் படுக்கையைச் சித்தம் செய்கிருன். சுந்தரேச முதலியார் கடிதங்களைப் பிரித்துப் பார்த்துக் கொண்டிருக்கிருர்.]

சு. படுக்கையை இரும்புப் பெட்டியின் பக்கத்தில் போடு—என் கைத்துப்பாக்கியைத் தலைமாட்டில் வை—இரண்டு பெயரையும் கூடாரத்துக்கு வெளியே அந்தப் பக்கம் ஜாக்கிரதையாகப் படுத்துக் கொள்ளச் சொல்—நீ இந்தப் பக்கம் படுத்துக் கொள்— [வெளியில் ஒரு ஸ்திரீயின் குரல் "பொன்னூர் மேனியனே"]

வீ. உம்! உம்! வந்தையா மறுபடியும்—பாடு—பாடு—நீ இண்ணைக் கெல்லாம் பாடினலும்—உனக்குப் பிச்சை போடரதில்லே.

சு. யாரடா அது?

வீ. பிச்சைக்காரிங்கோ — ரெண்டுபேரு — கெய்வி ஒருத்தி, கொமரி ஒருத்தி—மத்தியான மெல்லாம் வந்து சொழலமிட்டுகினு இருந்தாங்க. ஒண்ணும் போடமாட்டேனிண்ணு

அடிச்சி தெரித்தூட்டே—மறுபடிக்கு ராத்திரிக்கி வந்தாங்க பாருங்க.

சு. என்ன குரல்! தமிழும் சுத்தமாயிருக்கிறது—வீராசாமி—ஏதாவது சாதம் மிகுதியாயிருக்கிறதா?

வீ. இருக்குதுங்கோ! — இவங்களுக்கு போடக்கூடாதுங்க! ஒரு நாளேக்குப் போட்டா தினம் வந்து ரொஷ்டு கொடுப்பாங்க!

சு. நான் சொன்னபடி செய். போ இருக்கிற சாதத்தைப் போட்டனுப்பு—பாவம்! போ.

வீ. சரி! இப்பவே சொன்னே. அப்புறம் தினம் வந்து உங்க காலே கட்டிக்கப் போராங்க பாருங்க!

சு. பரவாயில்லே போ. [வீராசாமி போகிருன்.]

இந்த நாட்டுப் புறத்திலே கூட இவ்வளவு நல்ல குரல் அகப்படுகிறதா? நமது சங்கீத வித்வான்களெல்லாம் தமிழ் இவ்வளவு திருத்தமாகப் பாடிஞல் போதும்—ஹல்லோ!—யாரிது தமிழ் காகிதம்? [படிக்கிருர்.]

என்ன பயித்தியம்! "கல்யாணத்துக்கு நாள் வைத்துக் கொள்ளும்படி தொந்தரவு செய்கிருர்கள். பெண் கொஞ்சம் கறுப்பாயிருந்தாலும் புத்திசாலி. அதிகமாய் படித்திராவிட்டாலும் நம்முடைய குலத்தைப் பார்க்க வேண்டியதாயிருக்கிறது. தாதாவைக் கேட்டோம். அவரும்—உடனே பதில் எழுதவும்"—எழுதலாம்!

[கடிதத்தை வெறுப்புடன் மேஜையின்மீது எறிகிருர்.]

பயித்தியம்! அடே—வீராசாமி!-தூங்கி விட்டிருப்பான்!—

[படுக்கையின் மீது படுத்துக் கொள்கிருர்.]

வீ. [வெளியில்] ஓ! போங்கோ ஓடி! இதென்ன சத்திரமிண்ணு பாத்துக்கிணேங்களா! தீவ்ட்டி கல்கட்டர் ஆபீஸ்! கபர்தார்!

சு. அடே! வீராசாமி—வீராசாமி!

வீராசாமி மறுபடி வருகிறான்.

என்னடா அது கூச்சல்?

வீ. அப்பவே சொன்னேன் கேட்டைங்களா. போட்ட சாதத்தே வாங்கினு ஓடிப் போகிறத்துக்கில்லாதே—மழை பேயுது, கொஞ்சம் படுத்துகிறதுக்கு எடம் வோணுமா—ஓதச்சி அனுப்பிச்சே ஒரு ஒதே!

சு. போய் விட்டார்களா?

வீ. போவாதே இருந்தா இன்னொரு ஒதே.

சு. கெட்டிக்காரன் தான், நீ போய்ப் படுத்துக்கொள் விளக்கைக் குறைத்து விட்டு. [வீராசாமி போகிறான்.]
யார் அது குறட்டை?—என்ன தூக்கம் தூங்குகிறார்கள்!

வீராசாமி மறுபடியும் பாலுடன் வருகிறான்.

வீ. பால் சாப்பிடலேங்கோ?

சு. உம் வேண்டாம் போ.

வீ. கெட்டுப் பூடுங்கோ இருந்தா.

சு. உஸ்! போடா.

வீ. நானு—சாப்புட்டுடட்டுங்களா?

சு. உம்—போ. [வீராசாமி போகிறான்.]

[கொஞ்சம் பொறுத்து ரங்கி கூடாரத்தின் அடியாக நகர்ந்து வந்து சுந்தரேச முதலியார் தூங்குமிடம் போய், தன் கையிலிருந்த கட்டாரியை ஓங்குகிறாள். உடனே தன்னைத்தானே தடுத்துக்கொண்டு அவரது தலையணையின் கீழிருந்த சாவிக்கொத்தை மெல்ல எடுத்துக்கொண்டு இரும்புப் பெட்டி யருகில் போய், அதைத் திறந்து அதிலிருக்கும் பணப்பையை எடுக்கிறாள். இதற்குள் கண் விழித்த சுந்தரேச

முதலியார் எழுந்து வந்து, கட்டாரியுள்ள அவளது கையை ஒரு கையால் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு மற்றொரு கையால் அவளது தலைக்கு நேராகத் தன் கைத்துப்பாக்கியைக் காட்டுகிறார்.]

சு. உஸ்! ஏதாவது திமிறிக்கொண்டு ஓடப்பார்த்தாயா, அப்படியே சுட்டு விடுவேன். வா இப்படி, விடு அந்தக் கத்தியை

[ரங்கி கட்டாரியைக் கீழே போட அதைத் தன் காலால் தூரத்தில் தள்ளி விடுகிறார்.]

வா இப்படி—உன்னை நான் ஒன்றும் செய்ய வில்லை வா—உட்கார் இப்படி, இதை விட்டு அசைந்தாயானால் உன்னைக் கொன்று விடுவேன். பக்கத் தறையில் இரண்டு டாணாக்காரர்களிருக்கிறார்கள், ஞாபகமிருக்கட்டும்.

[விளக்கை ஏறப்பார்த்து]

நான் சொல்கிறதை கவனமாய்க்கேள், தப்பித்துக்கொண்டு ஓடப்பார்க்காதே. பிரயோஜனமில்லை. இதில் ஆறு குண்டுகள் போட்டிருக்கின்றன. ஒன்றும் பயப்படாதே! நான் கேட்கிறதற்கெல்லாம் பதில் வாஸ்தவத்தைச் சொன்னாயானால் உன்னை மன்னித்து விட்டு விடுவேன். பொய் ஏதாவது பேசினாயானால் உன்னை டாணாக்காரர்களை எழுப்பி, ஜெயிலுக்கு அனுப்பி விடுவேன் தெரியுமா?

[ரங்கி தலையை அசைக்கிறாள்.]

உன் பெயர் என்ன?

ர. உம்—காமாட்சி.

சு. [தலையை யசைத்து] பொய்! உன் நிஜமானபெயரைச் சொல்லுகிறாயா, கூப்பிடவா அவர்களை?

ர. வேணாம் வேணாம்!—ரங்கி.

சு அதை முன்பே சொல்லியிருந்தால்! நான் கடைசி முறை சொல்லுகிறேன், என்னிடம் பொய் மாத்திரம் பேசாதே—என்ன வயது உனக்கு?

ர. எனக்குத் தெரியாது.

சு. சரி! உன்னை யார் அனுப்பினது இங்கே திருட?—வாஸ்தவத்தைச் சொல்.

ர. நானு—வந்தேன்.

சு. உம்—சரி—கூப்பிட வேண்டியதுதான் [எழுந்திருக்கிறார்.]

ர. வேணும்—வேணும்! சொல்றேன்! சொல்றேன்!

சு. சொல் பயப்படாதே!

ர. [தேம்பி அழுகிறாள்.]

சு. ஏன் அழுகின்றாய்? ஒன்றும் பயப்படாதே! சொல் வாஸ்தவத்தை! ஏன் அழுகின்றாய்?

ர. சொன்னு—என்னெ—கொண்ணுடுவாங்க! [அழுகிறாள்.]

சு. நான் சொல்வதைக்கேள். நீ மாத்திரம் வாஸ்தவத்தைச் சொல்லிவிடு. நான் உன்னைக் காப்பாற்றுகிறேன்.

ர. ஓர்த்தர் கிட்டவும் சொல்லக்கூடாது?

சு. இல்லை—சந்தேகப்படாதே, நீ மாத்திரம் நிஜத்தைச் சொன்னால் தான் சத்தியமாக வேறொருத்தருக்கும் சொல்லமாட்டேன், சொல், சீக்கிரம்.

ர. எங்கப்பா அனுப்பிச்சாரு.

சு. யார் உன் அப்பா?

ர. வீரமுத்து.

சு. ஓ! கொஞ்சம் முன்பாக பிச்சைக்காரி போல் பாடிக்கொண்டு வந்தவள் நீயா?

ர. ஆமாம்.

சு. நினைத்தேன்!—உன்னுடன் யார் வந்தது?

ர. எங்க அம்மா.

சு. எங்கே உன் அம்மா இப்பொழுது?

ர. ஆத்துக்குப் போயிட்டா.

சு. என்ன ! [விளக்கை யெடுத்து அவளது முகத்தை உற்றுப் பார்க்கிறார்.]

ரங்கி!—பெண்ணே!—என்னிடம் பொய் பேசியிருக்கிறாய் நீ! நான் அவ்வளவு சொல்லியும்—கடைசி முறை உன்னை மன்னித்தேன் ! இப்பொழுதாவது வாஸ்தவத்தைச் சொல்லி விடு, ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். உன்னை எப்படியும் நான் காப்பாற்றுகிறேன். நீ வீரமுத்தின் பெண்ணல்ல—இந்த ஜாதியிலேயே பிறந்தவளல்ல—நீ யாருடைய பெண் ?

ர. நான் வாஸ்தவத்தைச் சொல்லி விடறேன். கோவிச்சிக்காதைங்க ?

சு. ஆ ! அதுதான் சரி. நான் ஒன்றும் கோபித்துக் கொள்ளவில்லை, சொல்.

ர. நான் பாப்பாரப் பொண்ணு ! எம்பேரு ரங்கநாயகி ! எங்கம்மா எனக்கு ஆறு வயசுலேயே செத்து பூட்டா, நானு சின்ன வயது மொதல் இவங்ககிட்டவே வளர்ந்து வந்தேன்.

சு. ஈசனே !—உன் தகப்பனார் யார் ?

ர. யாரு ?

சு. உன் தகப்பன் ? உன் அப்பா ?

ர. அப்பா—யாருமில்லே.

சு. என்ன ?

ர. [கண்ணீருடன்] நிஜம்மா—எங்கமமா—சின்ன வயசுலே தாலி அறுத்தூட்டாங்களாம். அப்புறம் நான் பொறந்தேனும், எனக்கு அப்பாவே யில்லையாம். [அழுகிறாள்.]

சு. ரங்கி—ரங்க நாயகி ! முகத்தைத் துடைத்துக்கொள். அழாதே ! யார் சொன்னது உனக்கு இதெல்லாம் ?

ர. வீரமுத்து! நானுசரியா திருடிகினு வராப்போனா—முண்டே பெத்த பெண்ணே ! முண்டெபெத்த பெண்ணே ! இண்ணு

சொல்லித் திட்டி அடிப்பாரு. ஒரு நாளு நானு மொள்ளமா இதெல்லாம் விசாரிச்சி தெரிஞ்சிகினேன் அவரு ஆத்திலே இல்லாதிருக்கும் போது.

சு. ஐயோ! ரங்கநாயகி, நீ நல்ல பிராம்மண ஜாதியிலே பிறந்தவளாச்சே, நீ திருடலாமா?

ர. ஏன்?

சு. திருடுகிறது தப்பல்லவா?

ர. ஏன்?

சு. உன் நகையையெல்லாம் நான் திருடிக்கொண்டு போய் விட்டால் உனக்குச் சந்தோஷமாயிருக்குமா?—இருக்குமா?—சொல்.

ர. இருக்காது—ஆனா திருடாபோனா சாப்பாடு போட மாட்டாங்களே ஆத்துலே.

சு. யார்?

ர. வீரமுத்து—அடிப்பாரே!

சு. இன்றைக்குத் திருட வில்லையே நீ; அடிப்பானா உன்னை அதற்கு?

ர. தாங்கட்டன இரனூறு ரூபாயையும் எப்படியாவது திருடிகினு வராப்போனா என்னே தூண்லே கட்டீட்டு முதுவு விரிஞ்சி போகப் புளிய மலாறுனாலே அடிப்பேன் இண்ணு சொல்லியிருக்கிறாரு! [தேம்பி அழுகிறாள்.]

சு. ஆமாம், இதற்கே இப்படி அழுகிறாயே, இப்பொழுது நீ இங்கே வந்து திருடப்பார்த்ததற்காக உன்னைப் போலீஸார் வசம் ஒப்பித்து ஏழு வருஷம் மண்ணுக்குப் போடப் போகிறேனே, அதற்கு என்ன செய்யப் போகிறாய்?

ர. ஐயோ! ஒண்ணுமில்லே! ஒண்ணுமில்லே; நான் செத்துப் பூடரனே! குத்திகினுசெத்துப் பூடரனே! ஜெயிலுக்குப் போர அவமானத்தைவிடக் குத்திகினு செத்துப் பூடணும்

இண்ணு சொல்லியிருக்கிறுரே வீரமுத்து! கொஞ்சம் கொடுங்களே அந்தக் கத்தியே! கொஞ்சம் கொடுங்களே! இல்லா போனு என்னெ சுட்டுக் கொண்ணூடுங்களே! ஜெயிலுக்கு மாத்திரம் அனுப்பாதைங்களே! அனுப்பா தைங்களே! உங்க காலே புடிச்சிகிறேனே!

சு. ரங்கநாயகி! எழுந்திரு; கூச்சல் போடாதே உன்னே ஜெயி லுக்கு அனுப்ப வில்லே—எழுந்திரு! அழாதே!

ர. நிஜம்மா—நிஜம்மா—நிஜம்மா?

சு. நிஜமாக! ஆனுல், நீ நான் சொல்கிறபடிச் செய்ய வேண் டும்.

ர. என்ன வேணுமிண்ணுலும் செய்யரேன்! ஜெயிலுக்கு மாத் திரம் அனுப்பாதைங்களே!

சு. எழுந்திரு; சொல்கிறேன்!

ர. [எழுந்திருந்து] நான் என்ன செய்யணும்?

சு. உன்னே யார் என்ன செய்தாலும் நீ சாகிற வரையில் இனித் திருடுகிறதில்லே என்று சத்தியம் செய்.

ர. அப்படியே.

சு. நான் சொல்கிறபடிச் சொல். என்னே யார் என்ன செய் தாலும்—

ர. என்னெ யார் என்ன செய்தாலும்,—

சு. நான் இனிமேல் திருட மாட்டேன்—

ர. அடிச்சா கூடவா?

சு. ஆம் அடித்தாலும்—கொன்ருலும்—அந்த அடி படுறது நல்லதா; ஜெயிலுக்குப் போவது நல்லதா?

ர. ஆமாம். யார் அடிச்சா கூட நானு இனிமேலே திருட மாட்டே.

சு. சாகிற வரையில்.

ர. சாவர வறைக்கும்.

சு. இது சத்தியம்.

ர. சத்தியம்—சத்திய மிண்ணு ?

சு. சத்தியம் என்றால்—பிரமாணம்—உம்—உங்களில் ஒன்று எப்படியும் செய்கிறேன் என்று உறுதியாய்ச் சொல்வதற்கு என்ன சொல்கிறது?

ர. ஆணையிடரதா?

சு. ஆமாம்.

ர. பெத்த தாயே கொண்ணு திண்ணுப்போல இண்ணு சொல்ரது.

சு. ஆ! அப்படியே ஆணையிடு.

ர. இனிமேலே நானு திருடனு, பெத்த தாயே கொண்ணு திண்ணுப்போலே.

சு. [அவளது இரண்டு கரங்களையும் பற்றி, அவள் முகத்தை எடுத்து பார்த்து] ரங்கநாயகி! — இனிமேல் திருட மாட்டாயே நீ?

ர. இல்லெ!—நெஜம்மா!—நெஜம்மா!

சு. உன்னை நம்புகிறேன்—போ இனி!—ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம்—நீ வந்த படியே ஒருவருக்கும் தெரியாதபடிப் போய்விடு.

ர. ஆமாம்......... [அழுகிறாள்]

சு. ஏன் அழுகிறாய் மறுபடியும்?

ர. வீரமுத்து என்னெ தூண்லே கட்டி அடிப்பாரு! — [கண்ணீரைத் துடைத்துக் கொண்டு] அடிச்சாகூட பொறுத்துகிறே!—நானு திருட மாட்டேன்!

சு. அதுதான் சரி!—ரங்கநாயகி!—பொறு கொஞ்சம்—வீரமுத்து உன்னை அடிக்காதபடிச் செய்கிறேன்—இந்தா

—இருநூறு ரூபாய். வீரமுத்து விடம் நடந்த தெல்லாம் நிஜமாய்ச் சொல்லி, நான் கொடுத்தனுப்பினதாக இந்த இருநூறு ரூபாயையும் கொடு.

ர. நீங்க—மாத்திரம்—திருடலாமா?

சு. ஹும்!—நான் திருட வில்லை. இது என் சொந்த ரூபாய்—என் சம்பளத்திலிருந்து கொடுத்தேன்—என் உயிர் போனாலும் ஒரு காசு கூட நான் திருடமாட்டேன்.

ர. அவரு—நீ ஏன் வாங்கிகினு வந்தே இண்ணு கோவிச்சிகினா?

சு. ஒன்றும் கோபித்துக் கொள்ள மாட்டான். நாளை காலையில் நான் அவனைப் பார்ப்பதாகச் சொல்; என் சொல்லைத் தட்ட மாட்டான். போ நேரமாகிறது—சீக்கிரம்.

ர. [தயங்கி] நீங்க சொல்ரபடி எல்லாம் அவரு—கேப்பாரா?

சு கேட்பான்—ஏன் கேட்கிறாய்?

ர. இல்லை—கேட்டேன்.

சு. என்ன இன்னும்—உன் மனதில் ஏதோ இருக்கிறது! சொல் பயப்படாதே!

ர. ஆனா—ஆனா—அவர்கிட்ட சொல்லி—அவரு பிள்ளை வீரபாண்டியனுக்கு என்னெ கண்ணாலம் பண்ணிக்கொடுக்கத் தேவலே இண்ணு சொல்லுங்களேன்.

சு. உம்—அப்படியே சொல்கிறேன்—ஏன்? உனக்கு அது இஷ்டமில்லையா?

ர. அவரே பாத்தா—எனக்கு பயம்மாயிருக்குது. அவருக்குதான் என்னெ கண்ணாலம் பண்ணணும் இண்ணு பேசிகிறாங்க! அத்தோட நானு குத்திக்கினு செத்து பூடலாமிண்ணு இருக்கறேன்.

சு. நீ ஒன்றும் பயப்படாதே! நான் அப்படியே சொல்கிறேன்—உம்—ரங்கநாயகி, நீ படித்திருக்கிறாயா?

ர. எனக்குப் படிக்கத் தெரியும். தேவாரம் பாடரத்துக்கு எனக்குப் படிக்கக் கத்துக் கொடுத்தாங்க—ஆனா ரெண்டு வர்ஷமா மறந்து பூட்டே.

சு. உனக்குப் படிக்க இஷ்டம் தானா?

ர. ரொம்ப இஷ்டம்—படிக்க—பாட்டுகெத்துக்க.

சு. உனக்கு மாதம் பத்து ரூபாய் கொடுத்தனுப்புகிறேன். நன்ருய்ப் படிக்கவும் பாடவும் கற்றுக்கொள். தெரியுமா? சீக்கிரம்.

ர. ஏன்?

சு. நான் சொன்னபடிச் செய்—எல்லாம் அப்புறம் சொல்கிறேன்.

வீ. [உள்ளிருந்து] அதென்ன விளக்கெரியுது!—யார் அங்கே?

சு. [விளக்கை அவித்து விட்டு] போ! சந்தடி செய்யாதே! வந்தவழியே போய்விடு!

[திடீரென்று அவள் நெற்றியில் முத்தமிட்டு அவளை வெளியே அனுப்பி விடுகிருர்.]

வீ. [உள்ளிருந்து] திருடன்! திருடன்! புடி! புடி!

[கான்ஸ்டபில்கள் இருக்குமிடம் வீராசாமி ஓட அவர்கள் இவனைப் பிடித்துக் கொண்டு அடிக்கின்றனர்.]

சு. [படுக்கையினின்றும் குதித்து] ஆ! பிடித்துக்கொண்டார்களா என்ன?—யாரடா அங்கே? ஆர்டர்லி! கொண்டுவா இப்படி திருடனை! [விளக்கை ஏற்றுகிருர்.]

இரண்டு ஆர்டர்லிகள் வீராசாமியைப் பின் கட்டாய்க் கட்டி இழுத்துக்கொண்டு வருகின்றனர்.

வீ. நானல்ல! நானல்ல! அதோ ஓடரான் திருடன்!

சு. யார் அடா திருடன்?—என்னடா இது?

வீ. நானல்லா நானல்லா இண்ணுகூட, திருடனெ உட்டுட்டு என்னெ புடிச்சிகினு வந்தாங்க இவங்க !—அப்பா ! முதுவெல்லாம் நோவுது !

சு. ஏண்டா ! தூக்கத்தில் ஒன்றும் தெரியவில்லையோ? போங்கள் கழுதைகளே ! [அவர்கள் மூவரும் வெளியே போகின்றனர். சுந்தரேச முதலியார் மறுபடியும் படுக்கையில் படுத்துக் கொள்கிறார்.]

காட்சி முடிகிறது.



# இரண்டாவது அங்கம்

## முதற் காட்சி.

இடம்—ஆனைமலையருகில் கூடாரம்.

காலம்—காலை.

மிஸ்டர் திருவேங்கடமும் சுந்தரேச முதலியாரும் ஒரு மேஜையின் எதிர் பக்கங்களில் உட்கார்ந்திருக்கின்றனர். மிஸ்டர் திருவேங்கடம் சில காகிதங்களில் கையொப்பமிட்டு சுந்தரேச முதலியாரிடம் கொடுத்துக்கொண்டிருக்கிறார்.

தி. இன்னும் ஏதாவது நான் கையெழுத்துப் போட வேண்டிய திருக்கிறதா?

சு. இல்லை, அவ்வளவுதான்.

தி. நீ இன்று முதல் கலெக்டர் பதவியைப் பெற்றதற்காக முதல் முதல் நான் உன்னைப் பாராட்டுகிறேன்.

[அவரது கையைப் பிடித்துக் குலுக்கி]

முக்கியமாக இந்த ஜில்லாவை உன் வசம் ஒப்புவிக்றேனே யென்று எனக்கு மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. எந் நேரமும் முகத்தைச் சுளித்த வண்ணம் இருக்கிறாரே அந்த துரையை எங்கு இங்கே கலெக்டராக்குகிறார்களோ என்று கவலைப்பட்டேன். நீ இந்த ஐந்து வருடகாலமாக இங்கு செய்திருக்கும் சீர்திருத்தங்களை யெல்லாம் தலை கீழாக ஐந்து மாசத்தில் மாற்றி விட்டிருப்பான். அவன் இந்த ஜில்லா கலெக்டரானால், இந்தக்குறவர்களும் மறவர் களும் தங்கள் பழைய வேலைக்கு மறுபடியும் ஆரம்பத்தி ருப்பார்கள்.

சு. அவர்கள் அவ்வாறு மறுபடியும் துன்மார்க்க வழியில் பிர வேசிப்பார்கள் என்று நான் நினைக்க வில்லை.

தி. உம், நான் அதை அவ்வளவு உறுதியாக நம்பவில்லை. இன்னும் சில வருடங்கள் போக வேண்டும். அதற்குத் தற்காலமிருக்கும் பழைய தலை முறை போய் புதிய தலை முறை வயதுக்கு வந்தால் தான், அது முற்றிலும் மாறுமென்று நினைக்கிறேன்—சில தினங்களுக்கு முன் ஒரு மறவன் காயப்பட்டதாகக் கேள்விப் பட்டாயா நீ?

சு. நேற்று நான் விசாகப்பட்டணத்திலிருந்து வந்ததும் அதை எனக்குத் தெரிவித்தார்கள். அவன் மரிக்கவில்லை என்று கேள்விப்படுகிறேன்.

தி. ஆயினும் வயித்தியர் அவன் பிழைப்பது கடினம் என்று தெரிவிக்க, நான் நேற்று டெபுடி கலெக்டரை அவனிடமிருந்து ஒரு ஸ்டேட்மெண்டு வாங்கும்படி கட்டளையிட்டிருக்கிறேன், அது வந்ததா?

சு. இன்னும் வரவில்லை.

தி. [தன் உள் ஜேபிலிருந்து சில கடிதங்களை எடுத்து] இவ் விஷயத்தைப்பற்றி நான் அறிந்ததை யெல்லாம் உனக்குச் சொல்ல வேண்டியது என் கடமையாகும். இதோ இக்கடிதங்களை சாவகாசமாகப்படித்துப் பார். இவைகளெல்லாம் கையொப்பமில்லாத கடிதங்களே! சாதாரணமாக அப்படிப்பட்ட கடிதங்களை நான் கவனிப்பதே யில்லை. ஆயினும் அவைகளில் எழுதியிருக்கும் விஷயங்கள் சுத்தப் பொய் என்று தள்ளிவிடுவது தகாது. இப்படிப்பட்ட கடிதங்கள் மூலமாக போலீஸ்காரர்கள் சில உண்மைகளைக் கண்டு பிடித்திருக்கிறார்கள் என்பதை நீ அறிவாய். இவைகளை யெல்லாம் முற்றிலும் நம்பும்படி நான் சொல்லவில்லை. ஆயினும் இவைகளை நீ சாவகாசமாய் ஆராய்ந்து பார்த்தல் நலமாம்—ஆ! இதோ இன்னொரு கடிதம் இருக்கிறது. —இவர் உனது மாமனார் என்று எழுதுகிறார்.

[ஒரு கடிதத்தைக் கொடுத்து]

சு. இதை நான் படிக்க வேண்டும் என்று சொல்கிறீர்களா?

தி. அதில் ஒன்றும் தவறில்லை. படித்துப் பார். யார் இவர், உனது மாமனுர் என்று அழைத்துக் கொள்பவர்?

சு. என்னுடைய தூர பந்துக்களில் ஒருவர்—மாமன் முறை யாக வேண்டும்.

தி. கலெக்டர் உத்யோகத்தில் மற்றவர்களுக்குக் கலியாணம் செய்து வைப்பதும் அடங்கியிருக்கிறது என்று எண்ணு கிருர் போலும்!

சு. உம்! இவர் பழய காலத்து ஆசாமி.

[தனக்குள் கடிதத்தைப் படிக்கிருர்.]

தி. அவர் எப்படிப்பட்டவராகவாவது இருக்கட்டும். அவரு டைய பெண் சரியானவளாயிருந்தால் நீ கலியாணம் பண் ணிக் கொள்ளுகிறது தானே! இன்னும் அந்தப் பழய ஞாபகமெல்லாம் நீங்கவில்லையா?

சு. உம்! [பெருமூச்செறிந்து] அது ஒரு புற மிருக்கட்டும். நான் கலியாணம் செய்து கொள்ளத் தீர்மானித்து, இவ்வுல கில் இவர் பெண் தவிர வேறொருத்தியும் இல்லாவிட்டா லும், இவர் பெண்ணை நான் மணம்புரியேன். புத்தியில்லாத, ஒன்றும் படிக்காத மூடப்பெண், நல்ல கறுப்பு, பணம் மாத் திரம் இருக்கிறது. அவ்வளவு தான். எனக்கிருக்கும் பணம் எனக்குப் போதும். இவர் பெண்ணும் வேண்டாம். இவர் சம்பந்தமும் வேண்டாம்.

[அக்கடிதத்தைத் திருப்பிக்கொடுக்கிருர்.]

தி. சரி, உன் இஷ்டம். ஆயினும் நீ தனியாகக் கலியாண மில்லாதிருப்பது எனக்குத் திருப்திகரமாயில்லை. இனி மேல் கிழவனுன பிறகா கலியாணம் செய்து கொள்ளப் போகிருய்! சீக்கிரம் தக்கபடி படித்த பெண் யாரையாவது பார்த்துக் கலியாணம் செய்து கொண்டு நீ சுகமாய் வாழ வேண்டுமென்பது தான் என் கோரிக்கை. உங்கள் பந்துக் களில் படித்த புத்திசாலியான பெண் ஒருத்தியும் இல் லையா?

சு. எங்கள் ஜாதிக் கட்டுப்பாடு உங்களுக்குத் தெரியாது. இந்து தேச முழுவதிலும் நான் கலியாணம் செய்துகொள்ளக் கூடிய குடும்பங்கள் சில தானிருக்கின்றன. அவைகளில் பருவம் வாய்ந்த படித்த பெண் ஒருத்தியுமில்லை.

தி. என்ன ஜாதிக்கட்டுப்பாடு?

சு. நான் கொண்டை கட்டி வேளாளன். அதிலும் ஒரு உயர்ந்த பிரிவைச் சேர்ந்தவன். எங்கள் குடும்ப எல்லைக்கு வெளியில் மணந்தால் என்னை ஜாதியிலிருந்து விலக்கி விடுவார்கள்.

தி. நான் சொல்வதைக்கேள். உன் மனதிற் கிசைந்த ஒரு கற்றறிந்த நற்குணமுடைய பெண்ணைப்பார்த்துக் கலியாணம் செய்துகொள். உங்கள் ஜாதியாரை யெல்லாம் நீ விலக்கி வை! அப்பொழுது தான் அவர்களுக்குப் புத்தி வரும்!

[எழுந்திருந்து]

நான் வருகிறேன், எனக்கு நேரமாகிறது. எட்டும்யில் இந்த வெயிலில் நான் குதிரையின் மீது சவாரி செய்ய வேண்டும், இல்லாவிட்டால் மத்தியான ரெயிலைப் பிடிப்பது கடினம்.

சு. நாளை போவீர்களென்று நினைத்தேன்.

தி. அப்படித்தான் முன்பு தீர்மானித்திருந்தேன். பிறகு மாற்ற வேண்டிய தாயிற்று. நான் வருகிறேன்; சுந்தரேசன்! ஸ்வாமியின் கிருபையினால் நீ சீக்கிரம் விவாகமாகி சுகமாய் நெடுங்காலம் வாழ்வாயாக! இதுதான் என்னுடைய—ஆசிர்வாதம். ஆ! நாளைக் காலை ஒன்று செய்ய எண்ணியிருந்தேன். அதை நான் நேராகச் செய்வதற்கில்லாமற் போகிறது.

சு. நீங்கள் சொல்வது எனக்கர்த்தமாகவில்லை.

தி. [**அவர் காதருகில்**] உன் சூட்சும புத்தி உன்னை விட்டுக் கொஞ்சம் அகன்றிருக்கிறது. நாளைக் காலை புது வருஷத்திய கௌரவப் பட்ட ஜாப்தாவில் உன் பெயரை நீ காண்

பாய்! நீ நாளைக் காலை திவான் பஹதூர் சுந்தரேச முதலி யாராகலாம்! அதுவரையில் இதை ரகசியமாக வைத்துவை.

[கையைப் பிடித்துக் குலுக்குகிறார்.]

சு. எல்லாம் உங்களுடைய ஆசீர்வாதம். என்னை என் தந்தை போலிருந்து எல்லாவிதத்திலும் முன்னுக்குக் கொண்டு வந்தீர்கள். உங்களுக்கு நான் செய்யத்தக்க கைம்மாறு என்ன இருக்கிறது?

தி. ஒன்றுமில்லை—ஆ! அப்படியல்ல—ஒன்றிருக்கிறது! என் சொற்படி கேட்டு சீக்கிரம் விவாகம் செய்துகொள்.

சு. [ஒரு வகையாகச் சிரித்து] பார்ப்போம். எப்பொழுதும் என் ஞாபகம் இருக்கவேண்டும். அடிக்கடி எனக்குக் கடிதம் எழுதவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தி. அதெல்லாம் முடியாது. நான் ஒன்றும் எழுதமாட்டேன்.

[சிரித்துக்கொண்டே]

உன் கலியாணப் பத்திரிகையை எனக்கு முதலில் அனுப்பினால் அப்புறம் தான் உனக்கு கடிதம் எழுதுவேன்!

சு. உங்கள் இஷ்டம்.

தி சுந்தரேசன்! நான் வருகிறேன்!

[கையைப்பற்றிக் குலுக்கி விட்டுப் போகிறார்.]

சுந்தரேச முதலியார் அவரை வழி விட்டுத் திரும்பி வருகிறார்.

சு. [மேஜையருகில் உட்கார்ந்து, கலெக்டர் கொடுத்து விட்டுப் போன கடிதங்களைப் பிரித்துப் பார்த்து] என்ன!—ஓ! அப்படியா சமாசாரம்? என்ன விந்தையாயிருக்கிறது!—அவள் செய்திருப்பாளா?

[மற்றக் கடிதங்களையும் பிரித்துப் பார்த்து]

ஏதோ விசேஷமிருக்க வேண்டும். ஆயினும் இதை நான் எப்படி நம்புவது?

[மேஜையின் மீதிருக்கும் மணியை அடிக்கிறார்.]

ஒரு ஆர்டர்லி வருகிறான்.

ஆ. சார்!

சு. சிரஸ்த்ததாரை நான் கூப்பிடுவதாகக் கூப்பிடு.

[ஆர்டர்லி போகிறான்.]

எல்லாக் கடிதங்களும் அவளையே குறிப்பிடுகின்றன ! மிஸ்டர் திருவேங்கடம் முன்பு கூறியது வாஸ்தவம்தானா? இவர்கள் குணம் எப்பொழுதும் மாருதா? உடனுடன் பிறந்தது என்கிறார்களே !—அப்படியுமில்லையே ! குறவர்களால் வளர்க்கப்பட்டபோதிலும் இவள் ஜாதியில் குறத்தியல்லவே ! சகவாச தோஷமோ? சீ! நான் அப்படி எண்ணுவதும் தவறு. நீர் விசாரியாது ஆத்திரப்பட்டுத் தீர்மானித்து விடலாகாது.

சிரஸ்த்ததார் வருகிறார். ஆர்டர்லி பின்னுல் வருகிறான்.

சி. [வணங்கி] கூப்பிட்டீர்களாமே.

சு. வீரபாண்டியன் ஏதோ மரண்காயம் பட்டதாகச் சொல்கிருர்களே, அதைப்பற்றி ஏதாவது பிரியாது வந்திருக்கிறதா?

சி. அந்த ஊர் கிராம முனிசிப் ஒரு ரிப்போர்ட்டு அனுப்பியிருக்கிருர். இதோ கொண்டு வருகிறேன்.

[போகிருன்.]

சு. [வெளியில் சைகில் மணி ஓசை] ஆர்டர்லி, யார் பாரது?

[ஆர்டர்லி போகிருன்.]

என்ன விபரீதம்! நான் கலெக்டரான நாளில் முதல் பிள்ளையார் குட்டாக இது வந்து சேரவேண்டுமா !

[பெருமூச்செறிகிருர்.]

ஆர்டர்லி வருகிருன்.

ஆ. [வணங்கி] இன்ஸ்பெக்டர் ஆப் போலீஸ் வந்திருக்கிருர். உங்களைப் பார்க்க வரலாமா என்று கேட்கச் சொன்னுர்.

சு. உடனே வரச்சொல். [ஆர்டர்லி போகிருன்.]

மறுபடி அரியநாயகம் பிள்ளையுடன் வருகிருன்.

[அவர் ஒரு செல்யூட் செய்கிருர்.]

சு. என்ன மிஸ்டர் அரியநாயகம் பிள்ளை! என்ன விசேஷம்?

அ. வீரபாண்டியன் மரண ஸ்டேட்மென்ட்—நேற்று ராத்திரி எடுத்தது—காலை கொண்டுவர கொஞ்சம் தவக்கமாயது, குறுக்கே வைகையாறு பெரு வெள்ளமாகப் போகிறபடியால், கடந்து வருவது கஷ்டமாயிருந்தது.

சு. கொடும் இப்படி அதை. [அதைவாங்கிப் படித்துப் பார்த்து] —இது நீர் நேராக எடுத்ததா?

அ. ஆம்.

சு. பிறகு என்ன செய்தீர்?

அ. உடனே—கைதியை அரெஸ்டு பண்ணிக்கொண்டு வரும்படி உத்திரவு செய்தேன்.

சிரஸ்த்ததார் மறுபடி வருகிறார்.

சி. இந்தாங்க கம்பிளெயின்ட் [கொடுக்கிறார்.]

சு. [அதைப்படித்துப்பார்த்து] அரிய நாகம்பிள்ளை! இதைப் படித்துப் பார்த்தீரா? இதற்கும், மரண ஸ்டேட்மென்டிற்கும் சில வித்யாசங்கள் இருக்கின்றனவே—பாரும்.

[அவரிடம் கொடுக்க, அவர் இரண்டையும் படித்துப் பார்க்கிறார்.]

—கைதியை அரெஸ்ட் பண்ணியாச்சுதா?

அ. காலையில்தான் அரெஸ்ட் பண்ணிக்கொண்டு வந்தார் சப் இன்ஸ்பெக்டர்.

சு. கைதியிடமிருந்து — ஏதாவது ஸ்டேட்மென்ட் வாங்கினீரா?

அ. இல்லை—சட்டப் பிரகாரம் நான் காயிதா பண்ண வேண்டியதைச் சொல்லி ஏதாவது—ஸ்டேட்மென்ட் கொடுக்கிறாயா என்று கேட்டதற்கு, அப்பெண்—நீங்கள் இங்கு முகாமில் இருப்பதையறிந்து— உங்களிடம் நேராக—தன் ஸ்டேட்மென்டைக் கொடுப்பதாகத் தெரிவித்தாள்.

சு. [வெளியில் சப்தத்தைக் கேட்டு]—உம்—அதோ கொண்டு வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது—உள்ளே வரச்சொல்லுங்கள்.

அ. ஆர்டர்லி, கைதியை அழைத்துவரச் சொல் உள்ளே.

[ஆர்டர்லி போகிறான்.]

இரண்டு சேவகர்களிடையில் விலங்கிடப் பட்டு ரங்கநாயகி வருகிறாள்.

அ. ரங்க—நாயகி—உன்பேரில்—நீ—வீரபாண்டியனைக் குத்தி—மரணகாயப் படுத்தியதாகக் குற்றஞ்சாட்டப்படிருக்கிறாய். நீ ஏதாவது இதைக் குறித்துச் சொல்ல விரும்புகிறாயா? பொறு!—நீ ஏதாவது கூறுமுன்—சட்டப் பிரகாரம்—நீ இப்பொழுது ஏதாவது எங்களுக்குத் தெரிவிப்பாயாயின் பிறகு கோர்ட்டில் அதை உனக்கு விரோதமான சாட்சியமாக உபயோகிக்கப்படும் — என்பதை அறிவாயாக. இனி ஏதேனும் சொல்லிக் கொள்ள விருப்பமானால் சொல்.

ர இவர்கள் எல்லோர் எதிரிலும் அதை நான் சொல்ல வேண்டுமோ?—உங்களிடம் தனியாக நான் சொல்லக் கூடாதா?

சு. கூடாது. இந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் இங்குதானிருப்பார். நீ சொல்வதையெல்லாம் அவர் எழுதிக் கொள்வார்—மற்றவர்களெல்லாம் இக் கூடாரத்தை விட்டு வெளியில் செல்லுங்கள்—நீ ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம்—மற்றவர்கள் போங்கள் வெளியே.

[போலீஸ் இன்ஸ்பெக்டர் தவிர மற்றவர்கள் வெளியே போகிறார்கள்.]

இன்ஸ்பெக்டரவாள், ஒருவார்த்தையும் விடாது அப்படியே எழுதிக் கொள்ளுங்கள்— ரங்கநாயகி, நீ அந்த வீரபாண்டியனைக் கத்தியினால் குத்தினது வாஸ்தவம்தானா?

ர. வாஸ்தவம்தான்.

சு. [அவளை உற்றுப்பார்த்து பெருமூச்செறிந்து] ஏன் அப்படிச் செய்தாய்?

ர. அவர் என்னைப் பலாத்காரமாகப்—பெண்டாளப்பார்த்தார். என் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு—நான் அவரைக் குத்த வேண்டியதாயிற்று.

சு. ஓ!—இன்ஸ்பெக்டரவாள், எழுதிக் கொண்டீர்களா?

அ. ஆச்சுது.

சு. ரங்கநாயகி, அது எப்படி நேர்ந்தது? ஒன்றும் விடாது உண்மையை விவரமாகச் சொல்.

ர. எங்கள் பள்ளிக்கூட விடுமுறையாகையால் என்னை வளர்த்து வரும் தாய் தந்தையர்கள் வீட்டிற்கு வந்திருந்தேன் முந்திய நாள் இரவு.

சு. நிதானமாகச் சொல். அவர் நீ சொல்லுகிறதை யெல்லாம் ஒரு வார்த்தையும் விடாது எழுதிக் கொள்ள வேண்டும். —உம்.

ர. நான் விடுமுறைக்காக வீட்டிற்கு வந்தது முதல் அடிக்கடி வீரபாண்டியர் நான் தன்னைக் கலியாணம் பண்ணிக் கொள்ள வேண்டுமென்று கேட்டு வந்தார். நான் அதற்கு இசையவில்லை. முந்திய நாள் இரவு நான் என் படுக்கை யறையில் உறங்கிக் கொண்டிருந்த பொழுது உள்ளே பிரவே சித்து தனக்கு நான் இணங்காவிட்டால் என்னைக் குத்திக் கொல்வதாகப் பயமுறுத்தினர். அதற்கும் நான் இசையா மல் தப்பியோட முயல, தன் கையிலிருந்த கத்தியால் என்னை முதுகில் குத்தினர். அவ்வுபத்திரவம் பொறுக்கமுடியா மல் என் மானத்தைக் காப்பாற்றி அவர் கையினின்றும் தப் பித்துக் கொள்ளும் பொருட்டு, வேறு வழி யில்லாமல் அவரை நான் குத்த வேண்டியதாயிற்று. அந்த இருட்டில் அவரை நான் எங்கு காயப்படுத்தினேன் என்பதும் எனக் குத் தெரியாது. பிறகுதான் அறிந்தேன். எப்படியாவது அவர் பிழைப்பாராக! அழகர் சாட்சியாக இது தான் நடந்த உண்மை. நீங்கள் அதிகாரிகள், என்ன வேண்டு மென்றாலும் செய்யுங்கள்.

சு. முதுகில் காயம் எங்கே பட்டது?

ர. இதோ [திரும்பிக் கட்டப்பட்டிருக்கும் காயத்தைக் காட்டுகிறான்.] காலையில் ஆஸ்பத்திரி வைத்தியர் கட்டுக் கட்டினார். இதோ அவருடைய சர்டிபிகேட். [இடுப்பிலிருந்து ஒரு காகிதத்தை எடுக்கிறான்.]

சு. ஆர்டர்லி, அதை வாங்கு இப்படி

[ஆர்டர்லி அதை வாங்கி சுந்தரேச முதலியாரிடம் கொடுக்கிறான்.]

சு. [அதை தனக்குள் படித்துக் கொண்டே] அரிய நாயகம் பிள்ளை, இவனுடைய வாக்கு மூலத்தை நம்புகிறீர்களா?

அ. நான் நம்புகிறேனுங்கள்.

சு. உம், இதையும் படித்துப் பாருங்கள்.

[டாக்டர் சர்டிபிகேட்டைக் கொடுக்கிறார்.]

அ. [அதைப் படித்துப் பார்த்து] நினைத்தேன்! இனி சந்தேகப்பட வேண்டியதில்லை. இந்த சர்டிபிகேட்டைக் கொடுத்த டாக்டர் நாராயணன் மிகவும் கூர்மையான புத்தி யுடையவர். அவர் ஒரு அபிப்பிராயம் கொடுத்தால் அது தவறு என்று எவராலும் அசைக்கமுடியாது. இந்தப் பெண்ணை — கைதியை — நாம் ஜாமீனில் விட்டுவிடலாமென்று தோன்றுகின்றது.

சு. உம், நாம் அவசரப்படலாகாது — ரங்கநாயகி, அந்த கத்தி — நீ குத்திய கத்தி யாருடையது? உன்னுடையதா? நீ வாங்கியதா?

ர. அல்ல, வீரபாண்டியருடையது. முன்னொரு முறை நான் அவரைக் கலியாணம் செய்துகொள்ளமாட்டேன் என்று கூறியபோது, எங்கள் வீட்டிற்கு எதிரிலிருக்கும் ஒரு கடைக்குப்போய் அதை வாங்கிக்கொண்டு வந்தார். வந்து நீ என்னைக்கலியாணம் செய்துகொள்ள ஒப்புக்கொள்ளாவிட்டால் அக்கத்தியால் நான் குத்திக்கொண்டு இறப்

பேன் என்று பயமுறுத்தினர். எங்கள் வீட்டிற்கு எதிரி லிருக்கும் கடைக்காரனைக் கேட்டால் அவனிடமிருந்த அக் கத்தியை அவர் வாங்கினதின் உண்மை வெளியாகும்.

சு. ஏதோ அவனது தகப்பனுரின் சொத்தை அபகரிப்பதற்காக நீ அவனைக் கொல்லவேண்டி மரண காயப்படுத்தியதாக வீர பாண்டியன் ஸ்டேட்மெண்டு கொடுத்திருக்கிறுன். அதற் கென்ன சொல்லுகிறுய் ?

ர. முற்றிலும் பொய்! அவருடைய தகப்பனுருக்கிருக்கும் இரண்டு ஏகர் நிலங்களும் பூராவாக அடமானம் வைக்கப் பட்டிருக்கின்றனவே! அவர் கழுத்தளவு கடனுளியாயிருக் கிறுரே! ஐந்து வருடமாக என் பள்ளிக்கூடத்துச் சம்பள மும்—

சு. [அவளைத் தடுத்து] ரங்கநாயகி, இந்த கேஸ் விஷயமான சமா சாரங்கள் தவிர மற்ற விஷயங்களைப்பற்றி இங்கு பேச வேண்டியதில்லை.

ர. உங்கள் இஷ்டம்.

மற்ருெரு கான்ஸ்டபில் விரைந்து வருகிறுன்.

கா. [செல்யூட் செய்து] சப் மேஜிஸ்டிரேட் அவர்கள் எஜமானைப் பார்க்க விரும்புகிறுர்கள்.

சு. கொஞ்சம் இருக்கச் சொல். ஒரு கைதியிடமிருந்து ஸ்டேட்மெண்ட் வாங்கிக்கொண்டிருக்கிறேன். அது முடிந் ததும் வரலாமென்று சொல். நீ போ வெளியே.

கா. நான் சொன்னேன். அந்தக்கைதி சம்பந்தமாகத்தான் ஏதோ அவசரமான சமாசாரம் கொண்டு வந்திருப்பதாகத் தெரிவிக்கச் சொன்னுர்.

சு. இந்தக் கைதி சம்பந்தமாகவா ?

கா. ஆம்.

சு. என்ன இருக்கும் ?—ஒருவேளை—வீரபாண்டியன் இறந்து விட்டானோ ?

ர. அழகப் பெருமாளே ! அப்படி யிராதிருக்குமாக !

[அழுகிருள்.]

சு. வரச் சொல்—ஆனல் அவரை—

[அந்தக் கான்ஸ்டபில் போகிருன்.]

ரங்கநாயகி ! பொறு—அவசரப்படாதே!—நீ கூறியது உண்மையானல்—நீ துக்கப்பட வேண்டியதில்லை.

ர. அந்த அழகர் மீதாணைப்படி நான் கூறியதில் அணுவளவும் பொய்யில்லை !

சப் மேஜிஸ்டிரேட் சவுந்தரராஜ ஐயர் விரைந்து வருகிருர்.

ச. குட்மார்னிங் !—இதோ அந்த வீரபாண்டியனின்-ஸ்டேட்மென்ட்

[அவர் கையில் கொடுக்கிருர்.]

சு. உட்காருங்கள்—என்ன பெருமூச்சு வாங்குகிறது ?

ச. மதுரையிலிருந்து சைகிலில் விரைந்து வந்தேன் ! மன்னியுங்கள்.

சு. என்ன அவ்வளவு அவசரம் ?

ச. அந்த ஸ்டேட்மென்டைப் படித்துப் பார்ப்பீர்களானல் —தெரியும்.

சு. அவன் முன்பே ஒரு ஸ்டேட்மென்ட் கொடுத்திருக்கிருனே ?

ச. ஆம்; அதை அறிவேன். அதனல்தான் இந்த ஸ்டேட்மென்டை நீங்கள் விரைவில் பார்க்கவேண்டியது அவசியமாகிறது.

சு. இதோ பார்க்கிறேன்—என்ன உங்களுக்கு இன்னும் பெருமூச்சு அடங்கவில்லை. ஆர்டர்லி, என் பலகாரப் பெட்டியில் ஒரு சோடா புட்டியிருக்கிறது, அதைத் திறந்து ஐயாவுக்குக் கொடு.

[ஆர்டர்லி அப்படியே செய்கிருன்.]

[அதற்கிடையில் அந்த ஸ்டேட்மென்டைப் படித்துப் பார்த்து] அம்மட்டும்!—உம்—அரியநாயகம் பிள்ளை, இதைப் படித்துப் பாருங்கள். [அவரிடம் அதைக் கொடுத்துவிட்டு]

சவுந்தரராஜ ஐயர், நீங்கள் இந்த ஸ்டேட்மென்ட் வாங்குப்படி எப்படி நேர்ந்தது?

ச. நேற்று காலை முதல் மதுரையெங்கும் கான்வென்ட் லேடீஸ் ஹைஸ்கூலில் படிக்கும் பெண் ரங்கநாயகி, ஒரு மறவனை மரணகாயப் படுத்தியதாகவும் அவனை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போயிருப்பதாகவும் அமளியாயிருந்தது. ஒரு வாரத்திற்கு முன்பாக அந்த ஸ்கூல் அனிவர்சரி கொண்டாட்டத்திற்குப் போயிருந்தபோது—இந்தப் பெண் —பரீட்சையில் தேறி இரண்டு மூன்று பரிசுகள் பெற்றதைக் கவனித்தேன். அப்பொழுது இவளுடைய சவிஸ்தாரங்களை விசாரித்த பொழுது சில விஷயங்களை அறிந்தேன். ஏதோ மிகவும் புத்திசாலியாகத் தோன்றுகிறுளே, இவள் குறவர் ஜாதியில் எப்படிப் பிறந்தாளென்று சங்கைப் பட்டேன். பிறகு இவள் கொலை செய்ய யத்தனித்தாகக் கேள்விப்படவே, ஐயோ பாவம்! இவள் இவ்வாறு செய்பவளாக என் புத்தியிற் படவில்லையே யென்று சந்தேகப்பட்டேன். இன்று காலை நான் அகஸ்மாத்தாக மதுரை பெரிய ஆஸ்பத்திரிக்கு வேறொரு மனிதனிடமிருந்து ஒரு மரண ஸ்டேட்மென்ட் வாங்கப் போயிருந்த பொழுது, என் வேலையை முடித்துக்கொண்டு திரும்புகையில், வீரபாண்டியன் நான் அங்கு வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு ஏதோமிகவும் அவசரமாக என்னுடன் பேச விரும்புவதாக, அவனுக்கு சிகிச்சை செய்து கொண்டிருந்த வயித்தியர் என்னிடம் வந்து தெரிவித்தார். நான் உடனே என்னவென்று அவனிடம் விசாரிக்கப் போனபோது, தான் இதற்கு முன்பாக போலீசார் வசம் ஒரு ஸ்டேட்மென்ட் கொடுத்திருப்பதாயும், அது சுத்தப் பொய்யென்றும், தனக்கிருந்த கோபத்தினுலும், தனது தாயாரின் தூண்டுகோலினுலும் அவ்வாறு

தவருன ஸ்டேட்மென்ட் கொடுத்ததாயும், நடந்த உண்மை இப்படி என்றும் என்னிடம் தெரிவிக்க, அவன் கூறிய ஒவ்வொரு வார்த்தையையும் விடாது அப்படியே இந்த ஸ்டேட்மென்டில் எழுதி அவனுக்குப் படித்துக்காட்டி அவன் கையொப்பத்தைப் பெற்றேன். உடனே நான் விசாரித்ததில்—இந்தப் பெண்ணை—போலீசார் கைதியாக்கி உங்கள் முன்பாக ஆஜர்படுத்தியதாக அறிந்தேன். உடனே இவ்வுண்மையை உங்களுக்குத் தெரிவிக்கவேண்டியது என் கடமை என்று எண்ணி, என் சைகிலில் விரைந்து வந்தேன்—இத்தனை மயில் தூரம்.

சு. நீங்கள் உங்கள் தேக சிரமத்தையும் பாராமல் இப்படிச் செய்ததற்காக உங்களுக்கு வந்தனம் புரிகிறேன்—ஆரிய நாயகம் பிள்ளை, ஸ்டேட்மென்டை முற்றிலும் படித்தாயதா? என்ன சொல்லுகிறீர்கள்?

அ. ஒரு முறைக்கு இரண்டு முறை படித்தேன்! இந்த அம்மாளுடைய ஸ்டேட்மென்டைக் கேட்டவுடன் இப்படித்தான் நடந்திருக்க வேண்டுமென்று என் மனதிற்பட்டது. என் மனதில் சந்தேகமேயில்லை. கலெக்டர் அவர்கள்தான் ஏதோ சந்தேகப்பட்டாற் போலிருக்கிறது. வீரபாண்டியன் ஸ்டேட்மென்டால் இவர்கள் கூறியது முற்றிலும் உண்மை யென்று ஸ்பஷ்டமாகிறது. இனி உடனே—இவர்களை—விடுதலை செய்ய வேண்டியதுதான்.

சு. உம்—ஜாமீன் யாராவது இருக்கிறார்களா?

அ. தங்களுக்குக் குறுக்காகக் கூறுவதற்காக என்னை மன்னிக்க வேண்டும். இனி ஜாமீன் பேரில் விடுவதாவது? எதற்காக ஜாமீன்? ஒரு குற்றமுமில்லாத இவர்களை நாம் அரெஸ்ட் பண்ணினதே தவருகும். உடனே ரிலீஸ் பண்ணும்படி உத்தரவு செய்யுங்கள்.

சு. ஆம், நீங்கள் சொல்லுவது நியாயம்தான். அந்த விலங்கைக் கழற்றி விடுங்கள்.

[அரியநாயகம் பிள்ளை சாவியைக்
கொண்டு விலங்கைக் கழற்றுகிருர்.]

ர. தாகம்!—இரண்டுநாளாயிற்று நான் சாப்பிட்டு—ஏதாவது கொஞ்சம் தாகத்திற்கு— [மூர்ச்சை யாகிருள்.]

சு. [அவளைக் கீழேவிழாமல் தாங்கி] பாவம்!—பிள்ளையவாள், என் பட்சணப் பெட்டியில் தர்மாஸ் பிளாஸ்கில் காபி இருக்கும் எடுங்கள். [அவர் அதைக் கொண்டுவந்து கொடுக்க, மெல்ல கண் விழிக்கும் ரங்கநாயகிக்கு அதில் கொஞ்சம் கொடுக்கிருர்.]

ர. நான் மூர்ச்சையானேனு என்ன? என்னை மன்னிக்க வேண்டும்.

சு அம்மா ரங்கநாயகி,—ஏதோ பிராரப்தம் ஒழிந்தது—என்று இரண்டு தினங்களாகப்பட்ட கஷ்டத்தை யெல்லாம் மறந்துவிடு. இனி சந்தோஷமாயிரு. முதலியாரவாள், இங்கேயே இவர்கள் இளைப்பாறட்டும் சாயங்காலம் வரை. இந்த வெயிலில் இவர்களை ஊருக்கு அனுப்பாதீர்கள். வேண்டுமென்ருல் சாயங்காலம் என்னைசட் காரில் அழைத்துக் கொண்டுபோய் விடுகிறேன் இவர்கள் வீட்டிற்கு.

ர. அந்த வீட்டிற்கு மறுபடியும் போக எனக்கிஷ்டமில்லை. என் பள்ளிக்கூடத்து ஹாஸ்டலுக்கே போகிறேன்—
[எழுந்திருக்கிருள்.]

சு. ஆம்! ஆம்! என்ன யோசியாமற் பேசினேன்—நீ உட்காரம்மா! கால் நடுக்குகிறது பார்! இன்று சாப்பிட்டுவிட்டு இளைப்பாறு. சாயங்காலம் இனி நீ எங்கே யிருக்கவேண்டுமென்பதைப் பற்றி யோசிக்கலாம். முதலியாரவாள், எனக்கு உத்திரவு கொடுங்கள். இன்றைக்கு என் கோர்ட்டில் அதிக வேலையிருக்கிறது. நான் வருகிறேன். சாயங்காலம் உங்களை வந்து பார்க்கிறேன்— அரியநாயகம் பிள்ளை, வாருங்கள், உங்களுடன் ஒரு சமாசாரம் பேசவேண்டி யிருக்கிறது.

சு. செய்யுங்கள். [சுந்தரேச முதலியார் ரங்கநாயகி தவிர, மற்றவர்களெல்லாம் கூடாரத்தினின்றும் வெளியே போகிறார்கள்.]

ர. [மற்றவர்கள் போனதும் சுந்தரேச முதலியார் பாதத்தில் வீழ்ந்து] நீங்கள் என்னைப் பெரிய ஆபத்தினின்றும் காப்பாற்றினீர்கள்!

சு. [அவளைக் கை கொடுத்து தூக்கி] ரங்கநாயகி—இதென்ன மதியீனம்? நானா காப்பாற்றினேன்? அந்த அழகர் தான் உன்னை இந்த ஆபத்தினின்றும் காப்பாற்றினார் என்று உறுதியாய் நம்பு.

ர. ஆம், ஆம்! அதற்குச் சந்தேகமில்லை. முந்திய நாள் இரவு நான் மிகவும் பயந்த பொழுது, அவரை நினைத்துக் கொண்ட பிறகு தான் எனக்கு என்னையுமறியாதபடி தைரியம் உண்டாயிற்று.

சு. உம்—அதை யெல்லாம் இனி மறந்துவிடு-இன்னும் கொஞ்சம் காபி சாப்பிடுகிறாயா?

ர. வேண்டாம்—இப்பொழுது என்களைப்பெல்லாம் நீங்கி விட்டது.

சு. ரங்கநாயகி, நீ சென்ற ஐந்து வருஷங்களாக விளையாட்டிற்கும் பொய் பேசுவதில்லை என்பதை நன்றாயறிந்திருக்கிறேன். ஆகவே நான் கேட்கும் கேள்விக்கு ஒன்றும் ஒளியாது நீ பதில் சொல்ல வேண்டும்.

ர. ஆகட்டும்.

சு. வீரபாண்டியன் உன்னை கலியாணம் செய்து கொள்ள விரும்பிய பொழுது, ஏன் அவனை வெறுத்தாய்? மற்றவர்களைவிட நல்ல புத்திசாலி, நன்றாய்ப் படித்திருக்கிறான், இவ் விஷயத்தில் ஏதோ குற்றஞ் செய்த போதிலும், சென்ற ஐந்து வருஷங்களாக அவனும் மிகவும் திருந்தியிருக்கிறான். அவனை மணம் புரிய உனக்கென்ன தடை?

ர. அவர்—எனக்கு அண்ணன் முறையாக வேண்டுமே ?

சு. உம் ! என்னைப்பார் இப்படி. இதெல்லாம் உதவாது. அவனது தந்தை தாயார் உன்னை வளர்த்துக் கொண்டவர்கள் தானே—வேறு ஏதாவது காரணம் இருக்கவேண்டும் இன்னதென்று என்னிடம் சொல்.

ர. அவரைக் கலியாணம் செய்துக் கொள்ள எனக்கிஷ்டமில்லை.

சு. உம்—சரி—உன் இஷ்டம். ஆயினும் ரங்கநாயகி—உனக்கிப்பொழுது என்ன வயதாகிறது ?

ர. இருபது வயதாகிறது.

சு. ஆனால்—நீ—இனி கல்யாண மின்றி—தனியாயிருப்பது—நியாயமல்ல. உங்கள்—சாதியில்—வேறு யாரையாவது கலியாணம் செய்து கொள்ளவேண்டுமென்று விரும்புகிறாயா ?

ர. இல்லை.

சு. வேறு—என்ன செய்யப் போகிறாய் ?

ர. நான் கன்னியாகவே என் வாழ் நாட்களைக் கழிக்கபோகிறேன்.

சு. அது தவறு, ரங்கநாயகி, உன் மனதில் ஏதோ இருக்கிறது —அதை இன்னதென்று என்னிடம் சொல்—

[அவளது முகவாய்க் கட்டையைப் பற்றுகிறார்.]

ர. [முகத்தைத் திருப்பிக் கொண்டு] ஒன்று மில்லை.

சு. சரி—உன் இஷ்டம்—என்னிடம் சொல்ல உனக்கிஷ்டமில்லை போலும். ஆயினும் கடைசியில் உன்னை ஒரு கேள்வி கேட்கிறேன். பெண் பாலாகிய உனக்கு வீரபாண்டியனைக் கத்தியால் குத்தும்படியான அவ்வளவு தைரியம் எப்படி வந்தது ?

ர. அவர்—உங்களை—வைதார்.

சு. என்னையா !— என்னவென்று ?

ர. என்னை மன்னியுங்கள் — அதைச் சொல்ல எனக்கிஷ்டமில்லை. [தன் முகத்தை தன் இரு கரங்களால் மூடிக் கொண்டு அழுகிருள்.]

சு. ரங்கநாயகி—அழாதே— என்னை வைதால்—அதற்காக—உம்—என்ன வைதான் சொல்—நான் இவ்வளவு கேட்கும் பொழுது நீ சொல்லாதிருக்கலாமா ?

ர. [கண்களில் நீர் ததும்ப] "சுந்தரேச முதலியார்— வைப்பாட்டியாக—வாழப்போகிருயா !"—என்ருன்—

[தேம்பி அழுகிருள்.]

சு. [அவள் கண்ணீரைத் துடைத்து] கண்ணே !—ரங்கநாயகி—அப்படி வேண்டாம் — சுந்தரேசன்—மனைவியாக வாழ்வாயாக !—அழகர் அருளால் !

[அவளைக் கட்டியணைந்து முத்த மிடுகிருர்.]

காட்சி முடிகிறது.



நாடகம் முற்றியது

# வைகுண்ட வைத்தியர்

ஒரு பிரஹசனம்.



நாடக பாத்திரங்கள்.



| | | |
|---|---|---|
| வைகுண்ட வைத்தியர் | ... ... | ஒரு தமிழ் வைத்தியர் |
| வீரம்பூரன் | ... ... | அவரது வேலையாள் |
| ஆலவாய்ப் பிள்ளை | ... ... | ஒரு நோயாளி |

## முதல் அங்கம்



### முதற் காட்சி.

இடம் வைகுண்ட வைத்தியர் வீட்டில் அவர் நோயாளிகளைப் பார்க்கும் அறை.

காலம்—காலை.

வைகுண்ட வைத்தியர் மேஜை அருகில் உட்கார்ந்து கொண்டு சில ஓலைப் புஸ்தகங்களைத் திருப்பிக் கொண்டிருக்கிறார்.

வீட்டிற்குள்ளிருந்த வீரம்பூரன் வருகிறான்.

வீ. எஜமான்! அந்தப் பூனைக்குட்டி பாலில்லாமல் கத்துகிறது. —ஒரு அரையணா இருந்தால் பால் வாங்கி—

வை. சத்! தப்பு அது! நன்றாகக் கத்தட்டும். "லங்கணம் பரம ஔஷதம்" என்று சொல்லி யிருக்கிறது வைத்திய சாஸ்திரத்தில். ஆகவே அதற்கு லங்கணம் போட்டால், அதற்கிருக்கும் வியாதியெல்லாம் போய் சுகமடையும்.

[வீரம்பூரன் உள்ளே போகிறான்.]

ஆலவாய்ப்பிள்ளை வருகிறான்.

ஆ. ஐயா! வைத்தியரே! எலி எலி!

வை. யாரப்பா நீ? என்ன சமாசாரம்?

ஆ. எலி! எலி!

வை. எலியா? நான் என்ன எலி வியாபாரமா செய்கிறேன்?

ஆ. அப்படியல்லவுங்கள்!—எலி உபத்திரவம் பொறுக்க முடியவில்லை!

வை. அதற்கு என்னிடம் வருவானேன்? கடைக்குப் போய் ஒரு எலிப்பொறிவாங்கி வீட்டிற்குக் கொண்டுபோய் வை. எலி உபத்திரவம் நீங்கிவிடும்.

ஆ. வீட்டிலே அல்லவுங்கள்! என் வயிற்றிலே!

[வயிற்றைத் தடவுகிறான்.]

வை. வயிற்றிலேயா? உனக்கென்ன பயித்தியம் பிடித்திருக்கிறதா என்ன? அடே வீரம்பூரன், இங்கேவாடா!

[வீரம்பூரன் வருகிறான்.]

இந்த ஆளை வீட்டை விட்டு அப்புறப் படுத்து!

ஆ. ஐயா! வைத்தியரே! அப்படிச் சொல்லாதீர்கள். முதலில் என் வயற்றிலிருந்து எலியை அப்புறப்படுத்துங்கள். உங்களுக்கு வேண்டிய ரூபாய்தருகிறேன்.

வை. அடே வீரம்பூரம்! கொஞ்சம் பொறு!—ஏனப்பா? உன் வயற்றில் எப்படி எலி போச்சுது?

வீ. வாருங்களையா. [ஆலவாய்ப் பிள்ளையை உள்ளே அழைத்துக் கொண்டு போகிறான்.]

வை. உம்!—மூன்று ரூபாய் லாபந்தான்; ஆனாலும் இதற்கு ஏதாவது சிகிச்சை செய்யவேண்டுமே!—நம்முடைய ஆயுர் வேத சாஸ்திரங்களில் இதைப்பற்றி ஏதாவது சொல்லி யிருக்கிறதா பார்ப்போம்!

[ஓலைப் புஸ்தகங்களைப் பரிசோதித்துப் பார்க்கிறார்.]

ஒன்றையும் காணோம்! எலி கடிக்கு மருந்து சொல்லி யிருக்கிறதே யொழிய—வயிற்றிற்குள் எலி புகுந்து கொண்டால் என்ன செய்வது என்று சொல்லவில்லை!— ஆ! எனக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது!—'மார்ஜாலோ மூஷிகரிபு' என்று சொல்லி யிருக்கிறது—அதுதான் சரி.

ஆலவாய்ப் பிள்ளை உள்ளிருந்து வருகிறான்.

என்ன? படம் எடுத்தாயிற்று?

ஆ. படம் எடுத்தாச்சுங்கோ. அதை என்னமோ டெவலப் (develop) பண்ண வேண்டுமாம்

வை. இதோ சீக்கிரம் வந்து விடும். உட்காரப்பா—உம்—உன் பெயர் என்ன?

ஆ. ஆலவாய்ப் பிள்ளை.

வை. ஓ! உன் வாயைக் காட்டு பார்ப்போம்.

[அதைப் பரிசோதித்து]

சரிதான்! இப்பொழுது ஸ்பஷ்டமாய்த் தெரிகிறது. இந்த வியாதிக்குக் காரணம் நம்முடைய வயித்திய சாஸ்திரங்களில், பகலில் தூங்கக் கூடாதென்று சொல்லி யிருக்கிறது; அப்படி தூங்குவதனாலும் வாயைத் திறந்துகொண்டு தூங்கலாகாது—இதோ பார்

[ஒரு ஓலைக்கட்டைப் பிரித்து படிப்பதுபோல் பாசாங்கு செய்கிறார்.]

"அப்பனே ஆளிவாயா,
ஆந்தைபோல் விழித்தக் கண்ணு
செப்பினேன் பகலில் நீயும்
சிறிதுமே தூங்கிடாதே,"

இனிமேலாவது பகலில் வாயைத் திறந்து கொண்டு தூங்காதே.　　[வீரம்பூரன் ஒரு படத்தைக் கொண்டு வந்து கொடுக்கிருன்.]

அப்பனே! ஆளிவாயா! பார்த்தாயா! நான் நினைத்தபடியே யிருக்கிறது. உன் வயிற்றிற்குள் நுழைந்த பிறகு இரண்டு குட்டிகள் போட்டிருக்கிறது! படத்தில் மூன்று எலிகள் இருக்கின்றன பார்!　　[காட்டுகிருர்.]

ஆ　ஐயோ! வயித்தியரே! இந்தக் குட்டிகளும் பெரிதாகி குட்டி போடுவதற்கு முன்பாக ஏதாவது சிகிச்சை செய்யுங்கள்!

வை.　அப்படியே ஆகட்டும், அதற்கு 36-ரூபாய் பீசாயிற்று. முப்பது ரூபாய் பெரிய எலிக்கும், ஆறு ரூபாய் அதன் இரண்டு குட்டிகளுக்கும்.

ஆ.　ஐயா, வைத்தியரே கொஞ்சம் குறைத்துக் கொள்ளக் கூடாதா?

வை.　முடியவே முடியாது.

ஆ.　ஆனல் சரிதான். இந்தாருங்கள்.
[ரூபாயைக் கொடுக்கிருன்.]

வை.　[அதைப் பையில் போட்டுக்கொண்டு] அப்பனே, உன் வியாதி சீக்கிரம் குணமாக வேண்டுமென்ருல், நான் சொல்கிறபடியே செய்ய வேண்டும்—குறுக்கே வாயைத் திறந்து—ஒன்றும் பேசலாகாது தெரியுமா?

ஆ.　இல்லையுங்கள்.

வை.　அடே! வீரம்பூரன், அந்த பசித்திருக்கிற பூனைக்குட்டியை இங்கே கொண்டுவாடா?

ஆ. அப்படி கொஞ்சம் கேளுங்கள் சொல்லுகிறேன். நான் நேற்று மத்தியானம் வழக்கம் போல் தூங்கிக்கொண் டிருந்தேன். நான் வாயைத்திறந்துகொண்டு குறட்டை விட்டுக் கொண்டு தூங்குகிற வழக்கம். அந்தச் சமயம் பார்த்து ஒரு எலி எப்படியோ உள்ளே நுழைந்து விட்டது. உள்ளே போனதும் அங்கிருந்த சாப்பாட்டை யெல்லாம் சாப்பிட்டுக் கொண்டு சவுக்கியமாய் உட்கார்ந்து கொண்டிருக்கிறது. நான் எவ்வளவோ யுக்தி செய்து பார்த்தும் வெளியே வரமாட்டேன் என்கிறது.

வை. [அவன் தொப்பையைத் தடவிப் பார்த்து] ஓ! இது மிகவும் அபாயகரமான விஷயமாச்சுதே!—உம்! உம்! உன் வயிற்றிற்குள் நுழைந்தது எலிதானா நிச்சயமாய்த் தெரியுமா?—ஒருவேளை பெருச்சாளியா யிருக்குமா?

ஆ. இல்லை வைத்தியரே, எலிதான்.

வை. இல்லை—வயிறு மிகவும் பெரிதாயிருக்கிறதே என்று கேட்டேன்.—உம்! இப்பொழுது அந்த எலி என்ன செய்கிறது வயிற்றிற்குள்ளே?

ஆ. என்ன செய்கிறதா? ஒரு நிமிஷம் சும்மா யிருக்க மாட்டேன் என்கிறது. இங்கும் அங்கும் ஓடிக்கொண்டே யிருக்கிறது, பீபில்ஸ்பார்க்கில் ஓட்டப் பந்தயத்தில் முதற் பரிசு பெற வேண்டுமென்று அப்யாசம் செய்வது போலிருக்கிறது. ஒரு நிமிஷம் எனக்குத் தூக்கமில்லை. அன்றியும் அகோர பசியா யிருக்கிறது.

வை. ஏன் அப்படி? நீ சாப்பிடுகிறதுதானே?

ஆ. நான் எதைச் சாப்பிட்டும் என்ன பிரயோசனம்? நான் எதைச் சாப்பிட்டாலும் வயிற்றுக் குள்ளிருந்து அதை யெல்லாம் இந்தப் எலிப்பிசாசு சாப்பிட்டு விடுகிறது. என் உடம்புக்கு என்ன பிரயோசனம்? எனக்கு ஒன்றும் தக்குவதே யில்லை!—ஐயா வயித்தியரே, உங்களுக்கு என்ன

வேண்டுமென்றாலும் தருகிறேன். இந்த எலி பாதையை நீக்கிவிடும்—தயவு செய்து.

வை. உம்! இரண்டு மார்க்கங்கள் இருக்கின்றன—ஒன்று சீக்கிரமாய் முடியும் — அதாவது ஏதாவது பாஷாணத்தைக் கொடுத்து இந்த எலியைக் கொன்று விடலாம்.

ஆ. ஐயா! அது வேண்டாம். பாஷாணத்தைச் சாப்பிட்டால் அந்த எலி சாகுமுன் நான் செத்துப் போய்விடுவேன்— இன்னொரு மார்க்க மென்ன?

வை. இன்னொரு மார்க்கம்—கொஞ்சம் நாளாகும். "லங்கணம் பரம ஔஷதம்" என்று வைத்திய சாஸ்திரத்தில் சொல்லி இருக்கிறது. பத்து நாள் லங்கணம் போட்டால் இந்த எலி ஆகாரமின்றி இறந்து போய்விடும்.

ஆ. அதற்கு முன் நான் போய்விடுவேனே! அதற்கு என்ன செய்கிறது? வைத்தியரே, வேறு ஏதாவது சிகிச்சை செய்யுங்கள். என் பாதை பொறுக்க முடியவில்லை.

வை. சற்றும் பயப்படாதே அப்பா. அப்படியே செய்கிறேன். முதலில் வயிற்றிற்குள் இருப்பதை எக்ஸ்ரே படம் (Xray Photo) எடுக்க வேண்டும், அதற்குப் பீசு மூன்று ரூபாய் ஆகிறது.

ஆ. இந்தாருங்கள். மூன்று ரூபாய் [கொடுக்கிறான்.] எதையாவது செய்யுங்கள். இந்த எலிப் பிசாசை மாத்திரம் வயிற்றிலிருந்து அப்புறப்படுத்தி விடுங்கள்.

வை. அடே! வீரம்பூரன்!

வீரம்பூரன் வருகிறான்.

வீ. எஜமான்.

வை. இந்த நோயாளியை உள்ளே அழைத்துக்கொண்டுபோய், இவர் வயிற்றிலிருப்பதற்கு ஒரு எக்ஸ்ரே படம் எடுத்து சீக்கிரம் டெவலப் (develop) பண்ணிக் கொண்டுவா.

வீ. வாருங்களையா. [ஆலவாய்ப் பிள்ளையை உள்ளே அழைத்துக் கொண்டு போகிறான்.]

வை. உம் !—மூன்று ரூபாய் லாபந்தான் ; ஆனாலும் இதற்கு ஏதாவது சிகிச்சை செய்யவேண்டுமே !—நம்முடைய ஆயுர் வேத சாஸ்திரங்களில் இதைப்பற்றி ஏதாவது சொல்லி யிருக்கிறதா பார்ப்போம் !

[ஓலைப் புஸ்தகங்களைப் பரிசோதித்துப் பார்க்கிறார்.]

ஒன்றையும் காணோம் ! எலி கடிக்கு மருந்து சொல்லி யிருக்கிறதே யொழிய—வயிற்றிற்குள் எலி புகுந்து கொண்டால் என்ன செய்வது என்று சொல்லவில்லை ! — ஆ ! எனக்கு ஒரு யுக்தி தோன்றுகிறது!—'மார்ஜாரோ மூஷி கரிபு' என்று சொல்லி யிருக்கிறது—அதுதான் சரி.

ஆலவாய்ப் பிள்ளை உள்ளிருந்து வருகிறான்.

என்ன ? படம் எடுத்தாயிற்று ?

ஆ. படம் எடுத்தாச்சுங்கோ. அதை என்னமோ டெவலப் (develop) பண்ண வேண்டுமாம்

வை. இதோ சீக்கிரம் வந்து விடும். உட்காரப்பா—உம்—உன் பெயர் என்ன ?

ஆ. ஆலவாய்ப் பிள்ளை.

வை. ஓ ! உன் வாயைக் காட்டு பார்ப்போம்.

[அதைப் பரிசோதித்து]

சரிதான் ! இப்பொழுது ஸ்பஷ்டமாய்த் தெரிகிறது. இந்த வியாதிக்குக் காரணம் நம்முடைய வயித்திய சாஸ்திரங்களில், பகலில் தூங்கக் கூடாதென்று சொல்லி யிருக்கிறது; அப்படி தூங்குவதனாலும் வாயைத் திறந்துக்கொண்டு தூங்கலாகாது—இதோ பார்

[ஒரு ஓலைக்கட்டைப் பிரித்து படிப்பதுபோல் பாசாங்கு செய்கிறார்.]

"அப்பனே ஆளிவாயா,
ஆந்தைபோல் விழித்தக் கண்ணு
செப்பினேன் பகலில் நீயும்
சிறிதுமே தூங்கிடாதே,"

இனிமேலாவது பகலில் வாயைத் திறந்து கொண்டு தூங்காதே. [வீரம்பூரன் ஒரு படத்தைக் கொண்டு வந்து கொடுக்கிறான்.]

அப்பனே! ஆளிவாயா! பார்த்தாயா! நான் நினைத்தபடியேயிருக்கிறது. உன் வயிற்றிற்குள் நுழைந்த பிறகு இரண்டு குட்டிகள் போட்டிருக்கிறது! படத்தில் மூன்று எலிகள் இருக்கின்றன பார்! [காட்டுகிறார்.]

ஆ. ஐயோ! வயித்தியரே! இந்தக் குட்டிகளும் பெரிதாகி குட்டி போடுவதற்கு முன்பாக ஏதாவது சிகிச்சை செய்யுங்கள்!

வை. அப்படியே ஆகட்டும், அதற்கு 36-ரூபாய் பீசாயிற்று. முப்பது ரூபாய் பெரிய எலிக்கும், ஆறு ரூபாய் அதன் இரண்டு குட்டிகளுக்கும்.

ஆ. ஐயா, வைத்தியரே கொஞ்சம் குறைத்துக் கொள்ளக் கூடாதா?

வை. முடியவே முடியாது.

ஆ. ஆனால் சரிதான். இந்தாருங்கள். [ரூபாயைக் கொடுக்கிறான்.]

வை. [அதைப் பையில் போட்டுக்கொண்டு] அப்பனே, உன் வியாதி சீக்கிரம் குணமாக வேண்டுமென்றால், நான் சொல்கிறபடியே செய்ய வேண்டும்—குறுக்கே வாயைத் திறந்து—ஒன்றும் பேசலாகாது தெரியுமா?

ஆ. இல்லையுங்கள்.

வை. அடே! வீரம்பூரன், அந்த பசித்திருக்கிற பூனைக்குட்டியை இங்கே கொண்டுவாடா?

வீரம்பூரன் ஒரு பூனைக்குட்டியைக் கொண்டு வருகிறான்.

அப்பனே, ஆளிவாயா!—இந்தப் பூனைக்குட்டியை எடுத்துக்கொண்டு போ. இன்றிரவு தூங்கும்பொழுது வாயைத் திறந்துகொண்டு தூங்கு—இந்தப் பூனைக்குட்டியை உன் மார்பின் மீது படுக்க வைத்துக்கொள்—எல்லாம் சரியாகப் போய்விடும்—நாளை காலை என்னை வந்து பார்.

ஆ. ஒருவேளை—

வை. அதுதான் வேண்டாமென்றேன்! வையித்தியர் வாக்குக்குக் குறுக்காக ஒன்றும் சொல்லக்கூடாது. சொன்னால் மருந்து பலிக்காது. போய் வா.

[ஆலவாய்ப்பிள்ளை பூனைக்குட்டியைத் தூக்கிக் கொண்டு வெளியே போகிறான்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாவது காட்சி.

இடம்—அதே இடம். காலம்—மறுநாட் காலை.

வைகுண்ட வைத்தியர் முன்பு போல் மேஜை அருகில் உட்கார்ந்திருக்கிறார். உள்ளிருந்து வீரம்பூரன் வருகிறான்.

வீ. என்னுங்க! இந்த எலிங்கள் தொந்திரவு பெரிசாப்போச்சு! நேற்று ராத்திரி என் துணியெல்லாங் கிழிச்சூட்டுதுங்க! இப்பவும் உக்கிராண அறையில் இரண்டு மூன்று சேர்ந்து கொண்டு காபுரா பண்ணிக் கொண்டிருக்குதுங்கள்! அந்த பூனையே நீங்க கொடுத்தூட்டது தப்புங்க. அது இருந்தா இந்த எலிங்கல்லாம் கிட்ட நாடாதுங்க—வேறொரு பூனை யாவது வாங்கினு வரட்டுமா?

வை. சீ! பூனைகுட்டியை விலை போட்டு வாங்குவதாவது! யாராவது கேட்டால் சிரிப்பார்கள்—உம்!—கொஞ்சம் பொறு சொல்கிறேன்—ஒருவேளை நம்முடைய பூனைகுட்டி நம்

மிடமே திரும்பி வந்தாலும் வரும் என்று எனக்குத் தோன்றுகிறது. சாயங்கலாம் வரைக்கும் பார்ப்போம்—நீ போய் உள்ளே உன் வேலையைப் பார்—அடடே கொஞ்சம் இரு—எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது—உக்கிராணத்திலே இருக்கிறது என்றாயே, அந்த எலிகளில் இரண்டு மூன்று பெரிய எலிகளை எலிபோன் வைத்துப் பிடித்துவை. ஒரு வேளை நமக்கு இன்று உபயோகப் பட்டாலும் படும்.

வீ. அப்படியே. [உள்ளே போகிறான்.]

வை. இன்றைக்கு வழக்கமாய் வரும் நோயாளிகள்கூட வரவில்லை! மருந்தே சாப்பிடாமலிருந்தால் சுபாவத்தினால் எல்லா வியாதிகளும் நீங்கும் என்று ஒரு மடையன் எழுதினாலும் எழுதினான், வைத்தியர்களாகிய எங்கள் பாடு கஷ்டகாலமாய்ப் போய் விட்டது; இன்னும் கொஞ்ச நாள் பார்க்கிறேன். இந்த வைத்தியத்தில் சரியான வரும்படி வராவிட்டால் இதை விட்டு ஜோஸ்யம் சொல்ல ஆரம்பித்து விடுகிறேன். அதற்கு மருந்து செலவு, வேலையாள் செலவு ஒன்றும் வேண்டியதில்லை. இந்த ஓலைப்புத்தகங்களே போதும்.

ஆலவாய்ப் பிள்ளை வருகிறான்.

ஆ. ஐயா! வைத்தியரே! என்ன இப்படி செய்து விட்டீர்களே! முன்பிருந்ததை விட வயிறு பெருத்துப் போய்விட்டதே! காலையில் எழுந்தது முதல் மூச்சு விடுவதற்கும் கஷ்டமாயிருக்கிறதே!

வை. நான் சொன்னபடியே செய்தாயா அப்பா?—எங்கே அந்த பூனைக்குட்டி?

ஆ. அதைத்தான் கேளுங்கள்! நேற்றிரவு நீங்கள் சொன்னபடியே படுத்துக்கொள்ளும்பொழுது அந்த பூனைக் குட்டியை என் மார்பில் வைத்துக்கொண்டு என் வாயைத் திறந்துகொண்டு தூங்கினேன். காலையில் எழுந்து பார்க்கிறேன் பூனைக்குட்டியைக் காணோம்! என் வயிறு மாத்தி

ரம் முன்னைவிட பெருத்துப்போயிருக்கிறது. வேண்டு மென்றால் பரிசோதித்துப் பாருங்கள்.

வை. [அவன் வயிற்றைப் பரிசோதித்துப் பார்த்து] ஓ! தெரிகிறது —இருந்தாலும் எதற்கும் இதற்கு ஒரு படம் எடுத்துப் பார்க்கவேண்டும்!

ஆ. அதற்கு வேறு மூன்று ரூபாய் கொடுக்கவேண்டுமா என்ன?

வை. பயப்படாதே! இரண்டாம் முறை படம் எடுப்பதற்கு இரண்டு ரூபாய் போதும்.

ஆ. அம்மட்டும் சந்தோஷம்! இந்தாருங்கள் இரண்டு ரூபாய். [கொடுக்கிறான்.]

வை. அடே! வீரம்பூரன்!

வீரம்பூரன் உள்ளிருந்து வருகிறான்.

வீ. ஏன்?

வை. இதோ இந்தப் பிள்ளையாண்டானை அழைத்துக்கொண்டு போய் வயிற்றினுள்ளிருப்பதற்கு ஒரு எக்ஸ்ரே படம் சீக் கிரம் எடுத்துக்கொண்டுவா.

[வீரம்பூரன் ஆலவாய்ப் பிள்ளையை உள்ளே அழைத்துக் கொண்டு போகிறான்.]

வை. தற்காலத்தில் ஆட்வொகேட்டுகளைப்போல், வைத்தியர்கள் ஒரு வீதிக்கொன்பது பெயர்கள் இருக்கிறார்கள். ஆகவே ஏதாவது ஸ்பெஷல் (Special) வைத்தியன் என்று பெயர் வைத்துக்கொண்டால்தான் பணம் சம்பாதிக்கலாம். இன் றைக்கே வெளியிலிருக்கும் என் பெயர் போர்டில் (Board) "இணையில்லாத எலி வைத்தியர்" என்னும் பெயரை எழுதி வைக்கிறேன்.

ஆலவாய்ப் பிள்ளை உள்ளிருந்து வருகிறான்.

ஆ. வைத்தியரே! படம் எடுத்தாயிற்று—அங்கே மாட்டியிருக் கும் மற்றப்படங்களைப் பார்க்க எனக்கு பயமாயிருந்தது,

வந்து விட்டேன்!—வயித்தியரே இன்று காலை முதல் வயிற்றுக்குள்ளிருந்து முன்புபோலல்லாமல் வேறுவிதமான சப்தம் உண்டாகிறது. அதை கவனித்தீர்களா?

வை. [வயிற்றில் ஸ்டேதாஸ்கோப் Stethoscope வைத்துப் பார்த்து] ஆம் ஆம்!—இது நேற்றிருந்த சப்தமல்ல. நேற்று எலி சப்தம் கேட்டது—இப்பொழுது பூனை சப்தம் கேட்கிறது!

ஆ. ஐயையோ! அந்தப் பூனைக்குட்டியும் வயிற்றிற்குள் போய் விட்டதா என்ன?

வை. ஆம்!—

வீரம்பூரன் ஒரு படத்தைக் கொண்டு வருகிறான்.

இதோ பார்த்தாயா படத்தை! பூனைக்குட்டி உன் வயிற்றிற்குள் உட்கார்ந்து கொண்டிருக்கிறது.

ஆ. ஐயையோ! வயித்தியரே! இது தானா நீங்கள் என்னை சொஸ்தப் படுத்துகிறது.!

வை. அப்பனே! ஆளிவாயா! நீ இவ்வாறு புத்தியில்லாதவன் போல் பேசலாமா? அந்த எலிகளின் உபத்திரவத்தினின்றும் உன்னைக் காப்பாற்றும்படி கேட்டாய், அதைச் செய்து முடித்தேனா இல்லையோ?

ஆ. எங்கே அந்த எலிகள்?

வை. அதைத்தான் நான் உன்னைக் கேட்கிறேன்? எங்கே அந்த எலிகள்?

ஆ. என் வயிற்றில் [படத்தைக் காட்டி] காணோமே.

வை. ஆம் உன் வயிற்றிலில்லை—இந்தப் பூனைக்குட்டியின் வயிற்றிலிருக்கின்றன! இந்தப் பூனைகுட்டி, அந்த பெரிய எலி ஒன்று, சின்ன எலிகள் இரண்டு, ஆக மூன்றையும் புசித்து விட்டது. அதன் வயிறுகூட உப்பியிருக்கிறது பார்.—அந்த எலி பயம் இனி உனக்கு வேண்டாம்; அந்த எலிகள் எல்லாம் இந்நேரம் பூனை வயிற்றில் ஜீரணமாய்ப் போயிருக்கும்.

ஆ. ஆமாம் வைத்தியரே! 'வாலு போயி கத்தி வந்தது டும்டும்' என்பது போல எலி போயி பூனை வந்திருக்கிறதே என் வயிற்றில்!

வை. அதற்கு வேறு சிகிச்சை செய்ய வேண்டும்—

ஆ. [பயந்து எழுந்து] என்ன! இந்தப் பூனைக்குட்டியைக் கொல்ல ஏதாவது நாயை என் வயிற்றிற்குள் விடப் போகிறீர்களா என்ன! வேண்டாம் வேண்டாம்! உங்கள் வயித்தியம் வேண்டா மெனக்கு! [ஓடப் பார்க்கிறான்.]

வை. [அவன் கையைப் பிடித்து தடுத்து] அப்பனே ஆளிவாயா! அப்படி ஒன்றும் செய்ய மாட்டேன் பயப்படாதே! இந்தப் பூனைக்குட்டியை வெளியில் அகற்றி விடுகிறேன் பயப்படாதே!

ஆ. ஆ! அப்படிச் செய்யுங்கள் உங்களுக்குப் பீசு கொடுக்கிறேன்.

வை. அதற்கு 50ரூபாய் பீசாகும்.

ஆ. என்ன வைத்தியரே! அதிகமாய்க் கேட்டீர்கள்! ஒருபெரிய எலிக்கும் இரண்டு குட்டி எலிகளுக்கும் 36 ரூபாய் கொடுத்தேன். இது ஒரே பூனைதானே, 12 ரூபாய் வைத்துக் கொள்ளுங்கள்.

வை. அதெல்லாம் உதவாது. ஒரே பூனையாயிருந்தாலும் இது எலியைவிட எவ்வளவு பெரியஜந்து; யோசித்துப் பார்.

ஆ. அதெல்லாம் உதவாது. நான் சொல்லுகிறதைக் கேளுங்கள். என்னிடம் இருபது ரூபாய்தானிருக்கிறது. அதை வாங்கிக்கொண்டு இந்தப் பூனையை என் வயிற்றிலிருந்து அப்புறப் படுத்துவதானால் செய்யுங்கள், இல்லாவிட்டால் நான் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போய் என் வயிற்றை அறுத்து இந்தப் பூனைக்குட்டியை வெளிப்படுத்தச் சொல்லிவிடுகிறேன். அதற்காக ஒரு சார்ஜும் கேட்க மாட்டார்கள். [எழுந்திருக்கிறான்.]

வை. வேண்டாம் அப்பா உட்கார். நீ நல்ல பிள்ளையா யிருக்கிறாய்; உனக்காக என்சார்ஜை குறைக்கிறேன். அந்த இருபது ரூபாயும் என்னிடம் கொடுத்து விடு.

[ரூபாயை வாங்கிக் கொண்டு]

ஆபரேஷன் (Operation) இல்லாமல் அரை நிமிஷத்தில் அந்தப் பூனைக்குட்டியை வெளிப் படுத்திவிடுகிறேன் பார்.

ஆ. வாஸ்தவமாய்?

வை. அப்படிக்குச் செய்யாவிட்டால் இந்த இருபது ரூபாயையும் வாபஸ் செய்து விடுகிறேன். இப்படி வா. இதோ இந்த ஸ்கிரீன் (Screen) பின்னாலிருக்கும் மேஜையின் மீது படுத்துக்கொள். [அப்படியே செய்கிறான்.] கண்ணை மூடிக் கொள்—வாயை ஆளிவாயைப்போல் திற—உனக்கு ஆளிவாயன் என்று சரியான பெயர் வைத்தார்கள் உன் தாய் தந்தையர்—அடே! வீரம்பூரன் [உள்ளிருந்து ஏன்?] அந்த எலி போனை இப்படிக் கொண்டுவா.

வீரம்பூரன் எலி யொன்றடைபட்டிருக்கும் எலிபோன் ஒன்றைக் கொண்டு வருகிறான்.

வீ. இதோ!

வை இதை அப்படியே திறவாமல் பிள்ளையாண்டான் வாயருகில் காட்டு. [வீரம்பூரன் அப்படியே செய்ய ஸ்கிரீனுக்குப் பின்னாலிருந்து ஒரு பூனைக்குட்டி வெளியே குதிக்கிறது.]

அப்பனே ஆளிவாயா! சட்டென்று உன் வாயை மூடிக் கொள்!—ஆ! அப்படி? இல்லாவிட்டால் அந்தப் பூனைக் குட்டி மறுபடியும் வாய்க்குள் நுழையப் போகிறது!—இப்பொழுது எப்படி யிருக்கிறது?

ஆ. அப்பா! வைத்தியரே!— [எழுந்திருந்து வெளியில் வந்து] உங்களுக்குக் கோடி நமஸ்காரம்! வயிற்றிலிருந்த பாதையெல்லாம் நீங்கிவிட்டது! அப்பா!

வை. அப்பனே, உனக் கென்ன வேலை?

ஆ. நான் போர்டுகள் பெயின்ட் (Board paint) பண்ணுகிறது.

வை. ஓ ! நிரம்பசரி ! அப்படியானால் எனக்கொரு உபகாரம் செய்யவேண்டும்.

ஆ. என்ன சொல்லுங்கள்; உடனே செய்கிறேன்.

வை என் பெயரைப்போட்டு, அதன் கீழ் "எலி வயித்தியத்தில் இணையில்லாதவர்" என்று எழுதின போர்டு ஒன்று தயார் செய்துகொடு.

ஆ. அதற்கென்ன ? அப்படியே ஆகட்டும்—நீங்கள் எனக்குச் செய்ததற்கு—அது கூடவா நான் செய்யக்கூடாது ? உம்—உங்கள் பெயரென்ன ?

வை. வைகுண்ட வைத்தியர்—என்று என்னை எல்லோரும் கூறுவார் ;ள்.

ஆ. வைகுண்ட வைத்தியரா !—அது ஏன் அப்படி பெயர் வந்தது ?

வை ஏனென்றால்—என்னிடம் வரும் நோயாளிகள் நான் கொடுக்கும் மருந்தினால் குணப்படாவிட்டால், அவர்களை வைகுண்டத்திற்கு அனுப்புவது வழக்கம். அங்கே என் தமையனார் போயிருக்கிறார். அவர் அங்கே அவர்களையெல்லாம் சொஸ்தப்படுத்தி விடுவார்.

ஆ. அவர் பெயர் என்ன ?

வை. பரமபத வைத்தியர்.

ஆ. அப்பொழுது அவருக்குக்கூட ஒரு போர்டு எழுதிக் கொண்டு வருகிறேன் [புறப்படப் பார்க்கிறான்.]

வை. உம் !—ஆமாமப்பா—அதை நான் அவரிடம் எப்படி அனுப்புவது ?

ஆ. நீங்கள் நேராக எடுத்துக் கொண்டுபோய் உடனே கொடுத்துவிடுங்களேன் ! [போகிறான்.]

வை. இவனுக்குக் கூட கொஞ்சம் புத்தியிருக்கிறது.

பிரஹசனம் முற்றிற்று.